# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

சிறப்பாசிரியர் : **தவத்திரு பொன்னம்பல அடிகளார்**



## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 8.00 |
| ஆண்டுச்சந்தா | ரூ. | 90.00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 1000.00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 2000.00 |

**சந்தா – விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :**

நிர்வாகி

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி – 630 206

சிவகங்கை மாவட்டம்

தொலைபேசி எண் : 04577 – 264227

இந்தியன் வங்கி, பிள்ளையார்பட்டி கணக்கு எண் : 554267544 மூலமும் மணியார்டர், வங்கி வரைவோலை / காசோலை மூலமும் அனுப்பலாம்.

ஆதீன இணையதள முகவரி : website : www.kkmutt.org

ஆசிரியர் : **மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் : ஸ்ரீ சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| | |
|---|---|
| திருவள்ளுவர் ஆண்டு 2045 | மாதம் : ஐப்பசி - மார்கழி |
| மலர் : 29 | இதழ் : 10-12 |


## காந்தியத்தின் வழியில் பொதுமைச் சமுதாயம் காண்போம்!

இந்த மனிதாத்மாக்களைப் பார்
மகாத்மா!
நீ உன்னையே உருக்கி
ஒரு சுதந்திர மோதிரம்
செய்து கொடுத்தாய்!
அணியும் பொழுதுதான்
அறிந்துகொண்டோம்
இவர்கள் விரல்களே
இல்லாத தொழுநோயாளர்கள்




– என்று. கவிப்பேரரசு வைரமுத்துவின் இந்த வைரவரிகள் காந்தி தந்த காந்தியத்தின் பாதையை விட்டு நாம் விலகிச் செல்வதைத் தானே காட்டுகின்றது!

தென்ஆப்பிரிக்காவில் நிறவெறிக் கொடுமையை உலகு அறியச் செய்ததன் காரணமாகத் தாயகம் சென்று மீண்டும் தென் ஆப்பிரிக்காவிற்கு வந்தபொழுது டர்பன் நகருக்குள் நுழைய அனுமதி மறுக்கப்பட்டு கப்பலில் குடும்பத்துடன் 21 நாட்கள்

சிறை வைக்கப்பட்டார்! டர்பன் நகருக்கு இரவில் நுழைய அனுமதி கிடைத்தது. அதை மறுத்து பகற் பொழுதில் டர்பன் நகருக்குள் நுழைந்த பொழுது அழுகிய முட்டைகளும், காய்கறிகளும், கற்களும் வீசப்பட்டு அதைத் தாங்கிக் கொண்டுதான் பயணித்தார். தம்மை அர்ப்பணித்த தியாகப் பயணம் காந்தி அடிகளின் வாழ்க்கைப் பயணம். மது, மாது, புலால் மூன்றையும் தீண்டேன் என்று தம் அன்னைக்கு இங்கிலாந்து செல்லும் முன் அளித்த வாக்குறுதியைக் காப்பாற்ற எந்தச் சோதனையிலும் சோர்விலாது காத்த பெருமையை என்னவென்பது! இரத்தம் உறைய வைக்கும் கடும் குளிர்ப் பிரதேசத்தில் பெருமான் வாழ்ந்த தவவாழ்க்கையை என்னவென்பது! தென் ஆப்பிரிக்கா நிற வெறிக் கொடுமை அவருக்கு அவமானத்தை தந்தது. அவமானத்தைக் கண்டு அஞ்சாமல் தம் தனி மனிதத் துன்பமாகக் கருதாமல் சமூகக் கொடுமையை எதிர்த்துப் போர்க்குணத்தோடு போராடத் தொடங்கினார்.

குடிசெய்வார்க்கு இல்லை பருவம் : மடிசெய்து
மானம் கருதக் கெடும். - என்ற குறளின் இலக்கியமும் இலக்கணமும் அவர்தான்!

காந்தி அடிகள் தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்தபோது தமிழ் மக்களிடம் காட்டிய அன்பு அளவிடற்கரியது! தென்னாப்பிரிக்காவின் தமிழ் மக்களின் தியாக வாழ்வை, தென் ஆப்பிரிக்காவில் நடைபெற்ற அறநெறிப் போராட்டத்தில் தங்களை அர்ப்பணித்த தியாகப் பெருவாழ்வை அண்ணல் எப்போதும் இதயம் கசிய நினைவு கூர்வார்! தென்னாப்பிரிக்காவில் விடுதலைப் போராட்டத்தில் தம் உயிர்இழந்த நாகப்பனும் வள்ளியம்மையும் செய்த அரும்பெரும் தியாகத்திற்கு ஈடு இணை ஏது?

தென் ஆப்பிரிக்கா விடுதலைப்போரில் தமிழ் மக்கள் புரிந்த துணையைப்போல் வேறு எந்த இந்தியரும் புரியவில்லை. அவர்கட்கு நன்றி அறிதல் காட்ட அவர்கள் நூலைப்

பயிலவேண்டும் என்று நினைத்தேன்; அவர்கள் மொழியைப் பயில்வதில் ஊக்கமாக ஒரு திங்கள் கழித்தேன். அம்மொழியைப் பயிலப்பயில அதன் அழகை உணரலானேன். அதுமனம் கவரும் ஒரு இனிய மொழி. தமிழ் மக்களில் பண்டைநாளிலும், இந்நாளிலும் கூட அறிஞர் பலர் இருந்தார்கள், இருக்கின்றனர் என்பது இம்மொழியின் அமைப்பாலும் பயிற்சியாலும் அறியக் கிடக்கிறது. இந்தியாவில் ஓரினம் ஏற்பட வேண்டும் என்றால் சென்னை மாகாணத்துக்கு அப்பால் உள்ளவரும் தமிழை உணரல் வேண்டும்! என்று மகாத்மா காந்தி அடிகள் கூறுகின்றார். தொடர்ந்து தூத்துக்குடியில் காந்தியடிகள் தமக்கு அளித்த வரவேற்புக்கு நன்றி கூறும் முகமாக உரையாற்றுகையில், இருபது ஆண்டுகளுக்கு முன்னரே நான் தமிழ் பயிலத் தொடங்கியதற்குக் காரணம் திருக்குறள் மூலத்தையே நேராகப் படித்தல் வேண்டுமென்று என் உள்ளத்து எழுந்த அவாவேயாகும். தமிழ் மொழியில் புலமை பெறுதற்குரிய ஓய்வு எனக்கு ஆண்டவன் அருளினாரில்லை. அதுகுறித்து யான் வருந்தும் வருத்தத்திற்கு ஓர் அளவில்லை! அவரவர் அவரவர்க்குரிய தாய்மொழி வாயிலாகக் கல்வி பெறல் வேண்டும். தமிழ்மக்கள் தங்கள் தாய்மொழியாகிய தமிழ் பயில வேண்டும். இது அவர்களது இன்றியமையாக் கடமை. தமிழர் தம் மொழியை ஆங்கிலம் முதலிய மொழிகளைவிட முதன்மையாகக் கருதல் வேண்டும்! என்று காந்தியடிகள் தம் தமிழ்மொழிக் காதலை வெளிப்படுத்துகின்றார்.

வெறுப்புக்கு மாற்றாக அன்பு

போட்டிக்குப் பதிலாக ஒத்துழைப்பு

தன்னலத்திற்கு எதிராக தியாகம்

புற ஆர்வத்திற்கு இடமில்லாத எளிமையான அகநாகரீகம்

என்பவைதான் காந்திய வாழ்க்கைப் பண்புகள்.

உலகில் தீண்டத்தகாதவர் எவருமே இல்லை. ஒரே நெருப்பின் சுடரொளிதான் ஒவ்வொருவரும். மனிதராய்ப் பிறந்த எவரையும் தீண்டத்தகாதவர் என்று ஒதுக்கி வைப்பதுதான் பெருந்தவறு என்ற மகாத்மா, தீண்டாமை ஒழிப்பில் அதிகக் கவனம் செலுத்தினார்.

எல்லா மக்களையும் ஆலயத்திற்கு அழைத்துச் செல்ல அண்ணல் யாத்திரை தொடங்கினார். அந்த யாத்திரையின் போது பூரி ஜகந்நாதர் ஆலயத்திற்கு அன்னை கஸ்தூரிபாய் சென்று வழிபாடு செய்து விட்டு வந்தார். இதை அறிந்த அண்ணலின் மனம் துடித்தது! தலித் மக்களுக்கு அனுமதி மறுக்கும் அந்த ஆலயத்தில் எப்படிச் சென்று வரலாம் என்று அன்னை கஸ்தூரிபாயிடம் வேதனைப் பட்டார். இதயத் துடிப்பு அதிகரித்துப் பேசமுடியாத நிலையை அடைந்தார்! மருத்துவர் அழைக்கப்பட்டு நீண்டநேரம் கழித்தே தன்னிலை அடைந்தார்.

அவர் உபதேசிப்பதைப் போலவே வாழ்ந்து காட்டிய பெருமகனார்.

சத்தியத்தைவிட மேலான மதம் எதுவுமில்லை என்பது காந்தியடிகளின் கருத்து.

என்னைப் பொறுத்தவரை
கடவுள் என்பது வாய்மையும் அன்பும் தான்.
கடவுள் என்பது ஒழுக்க நெறியும் அறவழியும்தான்!
கடவுள் என்பது அச்சமின்மைதான்!
கடவுள் என்பது மனச்சாட்சி!

இந்தக் கடவுளை எவரும் மறுக்க முடியாது என்றார் நம் தேசத் தந்தை மகாத்மா.

மகாத்மா ஒருமுறை டெல்லியிருந்து கல்கத்தாவுக்கு இரயிலில் பயணம் செய்தார். பாட்னா இரயில் நிலையத்தில் அமைச்சர் ஒருவர் அவரைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தார். இரயில் புறப்பட வேண்டிய நேரம் கடந்துவிட்டது. தாங்கள் எப்போது விரும்புகிறீர்களோ அப்போது இரயில் புறப்பட அனுமதிக்கிறேன் என்றார் இரயில் நிலைய மேலாளர்.

மகாத்மா வியப்புடன் இரயில் நிலைய மேலாளைப் பார்த்து இது என்ன நியாயம்? என் விருப்பத்தைக் கேட்க வந்தது போல் நீங்கள் ஒவ்வொருவரிடமும் கேட்பீர்களா? நான் உங்கள் அதிகாரி அல்ல: உங்கள் கடமை சட்டப்படி நடப்பதுதான். அமைச்சர்கள் மக்களின் சேவகர்கள். அவர்களை உங்கள் சகோதரர்களாகப் பாவித்தால்போதும். முதலில் நேரப்படி வண்டி புறப்பட அனுமதியுங்கள்! என்றார்.

ஒரு நாள் மகாத்மாவிடம் பிர்லா, மனிதன் உண்டு உடுத்தி இன்பமாய் இந்த மண்ணில் வாழ எவ்வளவு பணம் வேண்டும்? என்றார். எவ்வளவுக்குள் சுகமாகவும் உடல் நலமுடனும் வாழ முடியுமோ அவ்வளவு இருந்தால் போதும் என்றார் காந்தியடிகள்.

நிறைய சம்பாதித்து அதிகமாகச் செலவு செய்வதை ஏன் நீங்கள் எதிர்க்கிறீர்கள்? என்று பிர்லா கேட்டபோது இயற்கைத்தாய் ஒவ்வொருவருக்கும் சாதாரண இன்ப வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களைத்தான் உற்பத்தி செய்கிறாள். மனிதன் வீணடிப்பதற்கு அவள் எதையும் உருவாக்குவதில்லை. யாராவது ஒருவன் தேவைக்கு மேல் தனக்கு என்று பயன்படுத்தினால் அடுத்தவனுக்கு அது இல்லாமல் போய்விடும் என்று பதில் அளித்தார் அண்ணல்.

ஏழைகளின் நலன் காக்கும் தர்மகர்த்தாக்களாக ஒவ்வொரு பணக்காரர்களும் பரிணமிக்க வேண்டும் என்பதுதான் காந்தியின் கனவு.

காந்தியடிகள் ஒரு வறட்டுச் சித்தாந்தியல்லர். அவர் சித்தாந்தம் ஓர் உயர்ந்த வாழ்க்கைக்குரியது. அது உடல் பலத்தைவிட ஆன்ம பலத்தில் அதிக நம்பிக்கை கொண்ட வாழ்வியல் நெறி. வாழ்க்கை முழுதும் உண்மையாய் இருப்பதும், அனைத்து உயிர்களிடமும் அன்பாய் இருப்பதும் தான் காந்திய தத்துவம்.

வசதிகள் குவிந்த வாழ்க்கைத் தரத்தைவிட அடிப்படைத் தேவைகளில் மனநிறைவுகாணும் வாழ்வியல் தரமே காந்தியத்தின் ஜீவநாடி.

கடையனுக்கும் கடைத்தேற்றம் தரும்

சர்வோதய சமத்துவ சமுதாயமே அதன் ஒரே இலட்சியம்!

எல்லோருக்கும் எல்லாம் கிடைக்கும். பொதுமைச் சமுதாயத்தை காந்தியத்தின் வழியில் காண்போம்.

என்றும் வேண்டும் இன்பம் அன்பு

---

*மனத்தினால் தீமையை மறுப்பது மட்டும் போதாது. ஒவ்வொரு நாளும் தீமையை விலக்கி, அதனை அறிதல் வேண்டும். நன்மையை மனத்தினால் அங்கீகரித்தல் மட்டும் போதாது. விடாமுயற்சியினால் ஒவ்வொரு நாளும் நன்மையைச் செய்து, அதனை அறிதல் வேண்டும்.*

**- ஜேம்ஸ் ஆலன்**

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருவாசகத் தேன்

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## புறம் புறம் திரிந்த செல்வம்!

தாய்! – உயிர்க்குலத்தில் தாய்க்கு நிகரான படைப்பு ஏது? இந்த உலகத்தில் தாய் கடவுள்! தாய், கடவுளை நினைப்பிப்பவள். தாய், கடவுளின் பிரதிநிதி. ஆம், குழந்தையின் உருவாக்கத்தில் தாயின் பங்கு மிகுதி. கடவுளின் கருத்தை முடித்துத் தருபவள் தாய். கருவில் மட்டுமன்று; மண்ணிற்கு வந்த பிறகும் குழந்தையின் வளர்ப்பில், காப்பில் தாயின் பங்கு அதிகம். குழந்தையின் நோய்க்குத் தாய் மருந்துண்கிறாள்! பத்தியம் பிடிக்கிறாள்! உறக்கத்திலும் தன் குழந்தையின் மீது விழும் பூங்கொத்தை ஒதுக்கித் தள்ளும் தாயை, பாரதிதாசன் படைத்துக் காட்டுகிறான். திருமுறைகள் "அம்மையே! அம்மையே!" என்று போற்றுகின்றன. "அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர்" என்று திருக்களிற்றுப்படியார்பேசும். "நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன்" என்று ஐங்குறு நூறு வழுத்தும். மாணிக்கவாசகரின் திருவாசகம் முழுதும் தாயன்பு பரிணமித்துள்ளது. "அன்னைப் பத்து" என்றே ஒரு பதிகம், திருவாசகத்தில் உண்டு.

தாய்! – மகவைப் பெற்று வளர்ப்பவள் தாய்! ஆனாலும் மகவைப் பெறுபவர்கள் அனைவரும் நல்ல தாயாகிவிடுவதில்லை. தாயிலும் தரங்கள் உண்டு. இந்தக் காட்சியைப் பெரும்பாலும் வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ள ஏழைகள் வீட்டில் காணலாம். தாயும் உடலுழைப்பில் ஈடுபட்டுப் பொருளீட்ட வேண்டும்; வீட்டிலும் வேலை பார்க்க வேண்டும். களியாட்டமோ பொழுதுபோக்கோ இல்லாத நிலையில் பல குழந்தைகளுக்குத் தாயாகிறாள். அதனால் உடலில் சோர்வு; வாழ்வின் சுமை; ஆன்மாவில் அழுத்தும் போக்கு; அலுத்தும் சலித்தும் வாழும் நிலை! அது அவள் குற்றமல்ல. சமூகத்தின் குற்றம். இனி, தான் பாலூட்டாமல் மாற்றுத் தாயின் மூலம் பாலூட்டும் தாயும் உண்டு. இது செல்வச் செழிப்பில் நிகழ்வது. இது வாழும் கலையறியாத குடும்பங்களில் காணப்படும் காட்சி! இளமை – அழகில் உள்ள கவர்ச்சியின் விளைவு. இது அடாவடித்தனம்; இயற்கையை இகழ்ந்த வாழ்வு. சில தாய்மார்கள் குழந்தையின் அழுகுரல் கேட்டதும் வந்து பாலூட்டுவர். இது வேறு பல பணிகளில் ஈடுபடுவதின்

விளைவு; கவனத்தில் சோர்வு! சில தாய்மார்கள் குழந்தைகள் அழாமலே காலக் கணிப்புடன் குழந்தைக்குப் பசிக்கும் என்றெண்ணிப் பாலூட்டுவர். இந்த மண்ணில் இவர்களே தாய்மார்கள் - நல்ல தாய்மார்கள்! வணக்கத்திற்குரிய தாய்மார்கள்! வரலாற்றில் இடம் பெறும் தாய்மார்கள்!

மாணிக்கவாசகர் இந்த நற்றாயினும் சிறந்த தாயை அறிமுகப்படுத்துகிறார். நினைந்தூட்டும் தாய் குழந்தையை மறப்பதுண்டு. மறதியைத் தொடர்வதுதானே நினைப்பு, மறத்தல் இல்லையெனில் நினைப்பும் இல்லை. மாணிக்கவாசகர் அறிமுகப்படுத்தும் தாய், குழந்தையை மறப்பது இல்லை! ஆதலால் நினைத்தல் வினை நிகழ்வு இல்லை. எப்போதும் இந்தத் தாய்க்குக் குழந்தையின் நினைவே; இந்தத் தாய் யார்? சிவசக்தியாகிய தாய்! இந்தத் தாய் ஆன்மாக்களை மறப்பதில்லை. அதனால் நினைவும் நிகழ்வதற்குரிய வாயில் இல்லை. சிவசக்தியாகிய தாய், குழந்தை மறுத்தாலும் மிகவும் பரிவுணர்வுடன் பாலூட்டுவாள். குழந்தை பாலின் தேவையை அறியாது. குழந்தையின் தேவை தாய்க்குத் தானே தெரியும். ஆதலால், குழந்தை மறுத்தாலும் இந்தத் தாய் விடுவதில்லை. மிகவும் பரிவுணர்வுடன் இழுத்துப் பிடித்துப் பாலூட்டுவாள்; பால் மட்டுமா? உணவினால் மட்டுமே வாழ்ந்து விடுவதில்லை; மருந்தும் தேவை! பாலுண்ணும் குழந்தை மருந்துண்ண மறுக்கும்! தாய் மருந்தும் தருவாள்! சிரிப்பினால் மருந்தும் கதையினால் கருத்தும் வழங்குபவள் தாய்!

தாய், தனது பிள்ளையின் தகுதி கருதி அன்பு காட்டுவதில்லை. தகுதியிருந்தால் மகிழ்வாள். தகுதி இல்லையானாலும் தன் பிள்ளையைச் சீராட்டவே எந்தத் தாயும் விரும்புவாள். ஆனாலும் தாயின் அறிவு, காரண காரியத்துடன் இயங்கும். தன் குழந்தை பாவச் செயல் செய்வதாயிருந்தால் எந்தத் தாயும் தாங்கிக் கொள்ளமாட்டாள்! எந்தத் தாயும் தன் மகவை "சான்றோன்" என்று கேட்கவே விரும்புகிறாள். அதேபோழ்து தன் குழந்தையைப் "பாவி" என்று தாய் வெறுத்து ஒதுக்கவும் மாட்டாள்! தாயின் அன்பு தன் குழந்தையின் அறியாச் செயல்களுக்கு - அவை அறியாச் செயல்கள் என்று அறிந்தாலும் உடன்படுவாள்! உடன் போவாள்! அன்பைப் பெருக்கி, நம்பிக்கையை வளர்த்து, பைய நன்னெறிக்கு அழைத்து வந்துவிடுவாள்! உடைப்பது எளிது; ஒறுப்பது எளிது; அழிப்பது எளிது; திருத்தம் காண்பது அரிய பணி! இதற்கு நிலத்தினும் பொறுமை தேவை. நலம் நோக்கித் திருத்தும் பணியாதலால் "பைய" என்ற சொல், வழக்கிற்கு வருகிறது. "பையவே சென்று

பாண்டியர்க்கு ஆகுக!" என்ற சேக்கிழார் வாக்கு, அனுபவத்தின் முதிர்ச்சியில் பிறந்தது. மாணிக்கவாசகரும் "பையத் தாழுருவி" என்பார். இத்தகு திருத்தப் பாட்டுப் பணியில் நிற்க, சராசரி மனிதரால் இயலாது. சான்றாண்மைக்கு ஆழி எனப்படுபவர்களாலேயே முடியும்!

மிகவும் பாவம் செய்வதற்குக் காரணம் அந்த மகவின் உடல்! உடல் வளர்ந்த அளவு ஆன்மா வளரவில்லை. ஆன்மாவை ஆட்டிப் படைக்கும் உடல் வலிமை தானே பாவம் செய்கிறது! ஆதலால், தாய் ஊன்பொதி உடலைத் திருத்துவாள். உடலின் ஆதிக்கம் ஆன்மாவின் மேலிருந்து பணி கொண்டால் பாவம் வளரும். உடலை, ஆன்மா பணிகொண்டால் புண்ணியச் செயல்கள் நிகழும். உடல், ஆன்மாவை வேலை வாங்கினால் உடலின் ஏவலை ஆன்மா செய்யும்; நிறைவேற்றும்! இதனால் மிகுதியான உணவைத் தின்றால் உடல் கொழுக்கும்; பருமனாகும்; முரட்டுத்தனம் மேவும்! இது உடல் நலத்திற்கு நல்லதல்ல; சமூகத்திற்கும் நல்லதல்ல; வன்முறையின் தாயே, ஆன்மாவை மறுத்த உடலின் ஆதிக்கம்! "ஊனினைப் பெருக்கி உயிரை இழந்தேன்" என்பார் சுந்தரர். ஆதலால், ஆன்மாவின் ஆளுமைக்குள் உடல் இருக்க வேண்டும். உடலின் எடை குறைதல், உடலுக்கும் நல்லது; ஆன்மாவுக்கும் நல்லது. உடலின் தேவைகள் குறைதல் வேண்டும். ஆன்மாவின் தேவைகள் பெருகி வளர வேண்டும். அதனால், சக்தியாகிய தாய் உடலை உருக்கி இளைக்க வைக்கிறாள். அதனைத் தொடர்ந்து ஆன்மாவின் ஞானஒளியைப் பொருத்துகிறாள். ஆம்! ஒளி, ஞானத்தின் சின்னம்! முகம்மது நபி, எல்லாம் வல்ல இறைவனிடம் "ஒளியை என் உடலில் நிரப்பு" என்று கேட்டுப் பிரார்த்தனை செய்கிறார். இத்தகு ஒளியால் உடலின் எடை குறைகிறது. உடல், ஆன்மாவின் கட்டுப்பாட்டில் இருக்கிறது. ஆன்மா, ஞான ஒளியைப் பெற்றிருக்கிறது! இதனால் இன்பம் மேவுகிறது. சாதாரண இன்பமன்று. அந்தம் ஒன்றில்லாத இன்பம்! ஆனந்தமாய இன்பம்! இடையீடில்லாத இன்பம்!

ஆன்மா ஆனந்தமயமான இன்பத்தின் அருமை தெரியாமல் அதனை இழந்துவிடலாம் அல்லவா? ஆன்மாவை ஆதியில் பற்றிய அறியாமை எதைத்தான் செய்யாது? இந்த உலக வரலாற்றின் பக்கங்களை நிரப்பியிருப்பது அறியாமையின் நிகழ்வுகளே! ஏன்? அறியாமையே கூட அத்தாணி மண்டபமேறி அரசோச்சியிருக்கிறது! ஐயோ பாவம்! அறிவு - ஒடுங்கி இருந்த காலமும் உண்டு. அறிவு பெற்ற ஒரே

காரணத்தால் ஒறுக்கப்பட்டதும் உண்டு. அறியாமையால் ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பத்தைத் துறந்து, மண்ணின் மேல் "நான்" "எனது" என்னும் மாயை கடித்த வாயிலேயே நின்று நடித்திட ஆன்மா விரும்பினாலும் ஆச்சரியப்படுதற்கில்லை. அறியாமையின் கொடுமை எழுதும் தரத்ததன்று. ஆன்மாவுக்கு அறியாமை கொடுத்துள்ள வினை குறைவா, என்ன? ஆதலால், சிவமாகிய சக்தி, ஆன்மாவைப் பின்தொடர்கிறது. ஆன்மா, செல்லுமிடமெல்லாம் ஆன்மாவின் பின்னே சிவமாகிய சக்தி தொடர்கிறது! ஏன்? ஆன்மா ஆனந்தமாகிய இன்பத்தை இழந்துவிடாமல் அனுபவிக்குமாறு செய்வது சிவசக்தியின் குறிக்கோள்!

வழிபாட்டுக்குரிய சிவசக்தி, புறம் புறம் திரிவானேன்? முன்பே போகக்கூடாதா? அது மரபு; மதிப்பு; மரியாதை! ஆனாலும் முழுதும் கடமையின் வழிப்பட்டதாகாது. முன்னே போனால் வழிகாட்டலாம்; தவறில்லை. வழி தவறிப் போகாமல் நெறிவழிச் செலுத்திக் காப்பாற்றலாமே என்று வாதிடலாம். இதில் உண்மை இருக்கிறது; மறுப்பில்லை. ஆனால், கீழே விழுந்தால் உடன் தூக்க இயலாது. பின்னே வந்தால் இடறியவுடனே காக்கலாம்; வழியும் காட்ட இயலும். உலகியலில் வழிகாட்டுவோர் பலர் இருந்தனர். இன்றும் பலர் உள்ளனர். ஆனால் பயன் என்ன? பொறுப்புணர்வுடனும் தயாவுடனும் எடுத்து வளர்ப்பதற்கு – ஆளாக்குவதற்கு முன்வருவோர் எவர்? உபதேசிப்போர் பலர் உள்ளனர். இடுக்கண் வருங்கால் காப்பாற்றுவோர் யார்? காப்பாற்றுவோர் தானே வேண்டும்! உபதேசத்தின் வழி உலகம் சென்றுவிடாது எடுத்தாண்டு இட்டுச் செல்வார் பின், உலகம் செல்லும்; உய்யும், காப்பாற்றுவோர் பின்னே வந்தால் தான் விழுந்தவுடன் தூக்கலாம்; எடுக்கலாம்.

திருப்பெருந்துறையுறை சிவன், மாணிக்கவாசகரை ஆட்கொண்டருளினன். அந்தம் ஒன்றில்லா இன்பத்தை வழங்கியருளினன். இந்த இன்பத்தை மாணிக்கவாசகர் இடையீடின்றி அனுபவிக்க, திருப்பெருந்துறையுறை சிவன் மாணிக்கவாசகரைப் பின் தொடர்கிறான்; திருஆலவாய் வரையில் பின் தொடர்கிறான்; மாணிக்கவாசகருக்காகக் குதிரைச் சேவகன் ஆகிறான். கொற்றாளாகி மண் சுமந்து பிரம்படி படுகிறான். எல்லாம் மாணிக்கவாசகரைக் காப்பாற்றத்தானே! காத்தாள்பவருக்குக் காத்தல் கடமை தானே! கடமை வாழ்வு எளிதன்று! காத்தாளும் கடமை எளிதன்று என்பதற்கு மாணிக்கவாசகர் வரலாற்றில் சிவபெருமானுக்குற்ற அனுபவங்களே சான்று.

நமது திருக்கோயில் திருவிழாக்களில் சுவாமியின் முன்னே நாம் போவோம்! சுவாமி பின்னே வருவார்! "போ, முன்னே போ! முன்னேறிப் போ! நான் பார்த்துக் கொள்கிறேன்!" என்று அறிவித்தல்தானே இது! ஏன்? நமது உலகியலில் கூட அமைச்சர்களுக்குப் பாதுகாப்புக்கு வரும் காவலர்கள், அமைச்சர்களுக்குப் பின்னேதான் வருவார்கள்! காவல் செய்வோர், காத்து வருபவர் பின்னே!

இறைவன் தாய்! நினைந்தூட்டும் தாயிலும் நனி நல்லன்! ஊனை இளைக்க வைத்து, உயிரை ஒளியூட்டி வளர்க்கிறான்! ஆனந்தமாய இன்பத்தைப் பொழிந்து கருணை செய்கிறான்! பொழிந்த ஆனந்தமாய இன்பத்தை ஆன்மா இழந்துவிடாமல் தொடர்ந்து அனுபவிக்கப் பின் தொடர்கிறான். சிவசக்தி பிறப்பும் இறப்பும் நீங்கும் வரை தொடர்கிறாள். நரகொடு சொர்க்கம் எங்கு புகினும் தொடர்கின்றாள். இந்தக் கடமையை நிறைவேற்றுவதில் அம்மம்ம, சிவசக்திக்கு உள்ள மகிழ்ச்சி எழுதியும் பேசியும் விவரிக்க இயலாதது! சிவசக்திக்கல்லவா ஆன்மாவின் அருமை தெரியும்!

ஆன்மாவுக்கு அறிவு ஒளி ஏற்றுவர். அவர்தம் வாழ்க்கையின் தேவைகளை நிறைவு செய்வர். அவர்களின் பொறிபுலன்களுக்குப் பொருள் கற்பிப்பர். அதற்கு மேலும் ஆன்மாவை வளர்த்து ஞான நெறியை அறிமுகப்படுத்துவர். இங்ஙனம் செய்த பிறகும் மனம் நிறைவுபெறாது. பழக்க வாசனையில் பெற்றதை இழந்துவிடக்கூடாதே என்ற கவலையில் தொடர்ந்து கண்காணிப்பர். எந்த ஒரு பணியிலும் நிர்வாகத்திலும் கண்காணித்தல் (Follow up) என்பது அவசியம் தேவை. நிர்வாக அறிவியல் பின்தொடர்தல், கண்காணித்தல், கணக்கெடுத்தல், பயன்பாடுகளைக் கணக்கிட்டு ஆய்வு செய்தல் என்ற செயல்முறைகள் வற்புறுத்தப்படுகின்றன.

இந்தப் பாடலில் "நினைந்து" என்ற சொல்வழி தேவைகளை ஆய்வு செய்து திட்டமிடலைக் குறிக்கிறது. திட்டமிட்ட பணியில் ஆர்வம் தலையெடுத்தல் வேண்டும் என்பதனை "தாயினும் சாலப் பரிந்து" என்ற வரி நினைவூட்டுகிறது. பணி செய்ய அறிவு தேவை என்பதனை "உள்ளொளி பெருக்கி" என்ற சொற்றொடர் உணர்த்துகிறது. "தேனினைச் சொரிந்து" என்ற சொற்றொடர் செயற்பாட்டையும் அதனால் விளைந்த பயனையும் பற்றிக் குறிப்பிடுகிறது. "புறம் புறம்

திரிந்த" என்ற சொற்றொடர் பின்தொடர்தலையும் கண்காணித்தலையும் வலியுறுத்துகிறது. "செல்வமே" என்று ஆக்கத்தை உணர்த்துகிறது. சமூக இயல் பாங்கில் இங்ஙனம் பொருள் கொள்ளலாம். ஆனால், திருவாசகம் உலகியல் கடந்த ஆன்ம அனுபவம்; திருவருள் அனுபவம்!

*பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப்*
*பரிந்து நீ பாவியே னுடைய*
*ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி*
*உலப்பிலா ஆனந்த மாய*
*தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த*
*செல்வமே! சிவபெரு மானே!*
*யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்*
*எங்கெழுந் தருளுவது இனியே!*

(திருவாசகம், பிடித்தபத்து-9)

(தொடரும்)

---

## "சீர்வரிசை" சண்முகராசா மறைவு

மும்பை மாநகர உலகத் திருக்குறள் பேரவை அமைப்பாளரும், தலைவருமான **சீர்வரிசை சண்முகராசா** அவர்களின் மறைவுச் செய்தியறிந்து "மக்கள் சிந்தனை" வருந்துகிறது. அப்பெருமகனார் தமிழ், தமிழின வளர்ச்சியை உயிர்மூச்சாகக் கொண்டு வாழ்ந்தவர். குன்றக்குடி ஆதீனம் பெரிய மகாசந்நிதானம் அவர்கள் பாலும் இப்போதைய மகாசந்நிதானம் அவர்களிடத்தும் பேரன்பு கொண்டொழுகியவர். அவர் தம் மறைவு உலகத் திருக்குறள் பேரவைக்குப் பேரிழப்பாகும். சீர்வரிசை சண்முகராசா அவர்களின் நல்லுயிர் அமைதி பெறுவதாக. அவரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் அவர்தம் குடும்பத்தினருக்கும் அன்பர்களுக்கும் "மக்கள் சிந்தனை" ஆழ்ந்த இரங்கலையும் ஆறுதலையும் தெரிவித்துக் கொள்கிறது.

**– ஆசிரியர்**



# அருட்செல்வர் மறைவு, ஈடுசெய்ய முடியாத இழப்பு!

அருட்செல்வர், டாக்டர்.நா. மகாலிங்கம் அவர்களின், மறைவுச் செய்தி நமக்கு பெரும் அதிர்ச்சி தந்தது. அண்ணல் காந்தியடிகளின் கொள்கைகளில் ஊறித் திளைத்து வாழ்ந்த உத்தமரைத் தமிழகம் இழந்துவிட்டது. இனி இப்படியொரு மாமனிதரைத் தமிழகம் காண்பது அரிது.

அருட்செல்வர் அவர்கள் கடின உழைப்பாலும் திட்டமிட்ட செயல்முறையாலும் செல்வரானார். அந்தச் செல்வத்தை மூலையில் முடக்கிப் போட்டுவிடாமல் பல தொழில் நிறுவனங்களை உருவாக்கி ஆயிரக்கணக்கான மக்களுக்குப் பணிவாய்ப்புகள் வழங்கி வாழ வைத்த சிறப்பினர் இவர். கல்விக்கோயில்கள் பல எடுத்து அறிவுச் செல்வம் வளர்த்த அறிஞர் இவர். அது மட்டுமின்றி பண்பாட்டு மறுமலர்ச்சி வேண்டி பலகலை இலக்கிய விழாக்களைச் சிறப்பாக நடத்தி மக்கள் நெஞ்சங்களில் நன்னெறி விதைகளைப் பாவி வளர்த்து வந்தவர். இவ்வகையில் இப்பெருமகனார் ஆண்டுதோறும் சென்னைமாநகரில் எடுத்துவந்த வள்ளலார் – மகாத்மாகாந்தி விழா குறிப்பிடத்தக்கது.

தேசப்பற்றும் தெய்வப்பற்றும் இருவிழிகளாகக் கொண்டு அயராது பணிபுரிந்து வந்தவர் இப்பெருமகனார். இவர்தம் தொண்டு பன்முகப்பட்டது. அரசியல் தலைவர்களும், அறிஞர் பெருமக்களும் அருளாளர்களும், தொழிலாளர்களும் சுற்றமாகச் சூழ வாழ்ந்த பெருமைக்குரியவர்.

தொழில் மேதை: கல்வியாளர்; எழுத்தாளர்; அரசியல் ஞானி: தேசப்பக்தியும் தெய்வபக்தியும் நிறைந்தவர்: ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர் எனப் பலநிலைகளிலும் உச்சநிலையில் வாழ்ந்த அருட்செல்வர் அறநெறியண்ணல் நா. மகாலிங்கம் அவர்களின் மறைவு ஈடுசெய்யமுடியாத இழப்பாகும். அவர் வழியில் நின்று பணி செய்வதே நம் அனைவரது கடமை. அருட்செல்வரின் ஆன்மா இறைவன் திருவடி நிழலில் இன்ப அமைதி பெற இறைஞ்சுகிறோம்.

– சிறப்பாசிரியர்

# கொங்குநாட்டுக் கவிஞர் வெள்ளியங்காட்டானின் தமிழ்ப் பணி

(புலவர். ம. இளங்கீரன்)

"படைப்பிலக்கியங்களில் படிப்போரின் மனதை எளிதாகவும் அழுத்தமாகவும் பற்றக்கூடியது கவிதை. "இலக்கியப் படைப்பாளரின் அனுபவம் முழுவதையும் அவர் நினைத்தவாறே வெளியிடுவதற்கு மிகச் சிறந்த வாயிலாக அமைவது பாட்டேயாகும்"[1] - என்ற முனைவர் தா.ஏ.ஞானமூர்த்தி அவர்களின் கருத்துக்கேற்ப அமைந்தவை கவிஞர் வெள்ளியங்காட்டானின் கவிதைகளாகும்.

"வெள்ளத்தின் பெருக்கைப் போல் கவிப் பெருக்கும் கலைப் பெருக்கும் மேவுமாயின் பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம் விழி பெற்றுப் பதவி கொள்வார்"[2] எனப் பாரதியாரும், "கங்கையைப்போல் காவிரிபோல் கருத்துக்கள் ஊறும் உள்ளம்"[3] என்று பாவேந்தரும் கவிஞனின் உள்ளம் பற்றிக் குறிப்பிடுகிறனர்.

எனவே படைப்பாளர்களின் தமிழ்ப் பணிகளை ஆய்வு செய்யும் நோக்குடன் "கொங்கு நாட்டுக் கவிஞர்களில் பாரதிக்குப்பின் கவிஞன் இல்லை என்ற வாதம் தலை காட்டும் நேரத்தில் "இதோ" என்று எளிதில் சுட்டிக்காட்டத்தக்க வகையில் வெள்ளியங்காட்டான் அவர்கள் உயர்ந்து விளங்குகிறார்"[4]. புதுக் கவிதையின் தாக்கம் மேலோங்கி இருந்த காலத்தில் மரபுக் கவிதை நெறிபிறழாது "மரபுப் பசுவின் மடியிலிருந்து சுரந்த பாலாகப்" பொழிந்துள்ளார்.

இவர் கவிதைகளில் கொங்கு நாட்டு மக்களின் வழக்காறுகள், சேரிப்புற மக்களின் வாழ்வியல் முதலியன ஆய்வு செய்யப்பட்டால் மரபுக் கவிதையின் வீச்சும், கவிஞரின் மனப்பதிவும் தொகுக்கப்பெற்றுப் பதிவு செய்யப்பட்டால், மக்களுக்குப் பயன்படும். ஆதலால் இக்கட்டுரையில் இடம் பெறும் வெள்ளியங்காட்டானின் கவிதைகளில் கருத்துச் செறிவு, கிராமியப் பாங்கு, சமுதாயச் சிந்தனைகள் மனிதனை மேம்படுத்தும் வகையில் ஆய்வு செய்யப்பெற்று அவர்தம் தமிழ்ப்பணியை வெளிப்படுத்துவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**வெள்ளியங்காட்டானின் நூல்களில் கால முறைப்படி வெளிவந்தவை**

இனிய கவிவண்டு (1948), கவிஞன் (1967), தாயகம் (1974), அறிஞன் (1977), தமிழன் (1979), பரிசு (1982), புரவலன் (1984), தலைவன் (1990), கவியகம் (2005). இருளும் ஒளியும் என்னும் குறுநாவல்கள், நீதிக்கதைகள் (2005), புது வெளிச்சம் (2006), கவிஞனின் கடிதங்கள் (2007), வெள்ளியங்காட்டான் கவிதைகள், 22 கட்டுரைகள் தொகுப்பு ஆகியன இவரது படைப்புகள் ஆகும்.

கோவை வட்டாரத்தில் நம்மோடு வாழ்ந்த பெரும் கவிஞர் வெள்ளியங்காட்டான் அவர்கள். இயற்பெயர் இராமசாமி. தாயார் காவேரி அம்மாள், தந்தையார் நாராயணசாமி ஆவார். மனைவி குட்டியம்மாள். ஒரு மகனும், இரண்டு மகள்களும் இவருக்கு மக்களாவர். நீலகிரி மலை அடிவாரத்தில் காரமடைக்கு அருகில் "வெள்ளியங்காடு" என்னும் சிற்றூரில் வாழ்ந்ததால் இவர் தனக்கு வைத்துக்கொண்ட புனைபெயர். "வெள்ளியங்காட்டான்" என்பதாகும். மனித நேயமும் பகுத்தறிவும் சமதர்மமும் இவரை ஆட்கொண்ட சிறந்த பண்புகள் ஆகும். 1904 ஆம் ஆண்டு பிறந்து 87வது அகவையில் 1991-ல் மறைந்தார். உலகத் தமிழ் எழுத்தாளர் வரிசையிலும் கொங்கு நாட்டுக் கவிஞர்கள் வரிசையிலும் இடம்பெற்ற பெருமைக்குரியவர். "நவஇந்தியா" நாள் இதழில் இலக்கியப் பகுதி ஆசிரியராகவும் பணியாற்றியவர். தவத்திரு குன்றக்குடி அடிகளாரால் மிகச் சிறந்த வள்ளுவம் வளர்க்கும் கவிஞர் என மாச்சம்பாளையம் விழாவில் பாராட்டப் பெற்றவர்; நமக்கும் வழி காட்டிய சான்றோர்.

வெள்ளிங் காட்டானின் படைப்புகள் நூல்கள் வாரியாகப் பகுத்தும் மற்ற கவிஞர்களோடு ஒப்பீடு செய்தும் கவிஞரின் அக வெளிப்பாட்டை விளக்கியும் காட்டப்பெறுகின்றன.

"அறிவுகடந்த அகன்ற வெளி அதன் பணிபடர்ந்த பாகம் அங்கிருந்தே கவிஞனிடம் விரைகின்றன கவிகள்"[6] என லாங்ஃபெலோ கூறுகிறார்.

"நினைவை நேர்மை செய்து - அன்பில்

நிலை நிறுத்து கவிதை
கனவு போன்ற வாழ்வைக் - கலையாய்க்
கவின்பெறச் செய்கவிதை"[7]

என வெள்ளியங்காட்டான் கவிதை பற்றிக் குறிப்பிடுகிறார். தாம் கற்ற கல்வியை ஒழுங்கு செய்தும் கொள்கை நிலை நிற்கக் கலைநயத்துடன் அழகுறச் செய்யப்பட்டது இவர் கவிதை எனில் மிகையாகாது.

"உள்ளத்தில் எழும் உணர்ச்சியை ஒழுங்குபடுத்திக் கேட்பவர் மனதில் நன்றாகப் பதியும்படி அந்த உணர்வில் தோயும்படி இருந்தால் அது கவிதை இலக்கியம் தான்"[8] என்பார் தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

வெள்ளியங்காட்டானின் நூல்கள் ஒன்றுக்கு மேற்பட்டவை ஆதலின் புறநானூறு நன்றிணைநானூறுபோல நானூறு என்னும் அளவினை உடைய அறுசீர் ஆசிரிய விருத்தங்களைக் கொண்ட நூல்கள் கவிஞன், அறிஞன், தமிழன், பரிசு, புரவலன் ஆகிய நூல்கள். மரபு பிறழாத மாண்புடைய நானூறுகள். அடுத்து "லிரிக்" என்னும் முத்துக் கவிதைகள் இனிய கவிவண்டு, தாயகம், வெள்ளியங்காட்டான் கவிதைகள் ஆகியன ஆகும்.

கவிஞன் (நானூறு)

கஞ்சி காய்ச்சி எடுத்துக்கொண்டு, குழந்தையை இடுப்பில் தாங்கிக் கொண்டு, குளிரில் நடந்து செல்லும் ஏழைத்தாயைக் கண்ட கவிஞன் உழைப்பவரைக் கண்டு உளமுருகுகின்றான். "நம் நாட்டில் பெரியோரால் பேணிக் காக்கப்பட்ட பண்பாடுகளாம் அறம், பொருள், இன்பம் என்பன மறைந்து போயிற்றோ"[9] என்று முகவாட்டமுற்றுக் கண்ணீர் பெருக வருந்தும் உணர்ச்சியின் வெளிப்பாட்டினை மிகச் சிறப்பாகக் காட்டுகிறார்.

......தெருவில் நின்று திக்கற்றுத் திகைப்போர்க் கெல்லாம்
தாயாவான் என்றும், தக்கோர் துன்பம் தானுறின் தகைமை சான்ற
மாயாவான் அமிழ்தமாவான் மாபெரும் கவிஞனாவான்"[10]

என்று கவிஞனின் இயல்பைக் கூறுகிறார்.

இக் "கவிஞன்" என்னும் காவியம் கவிஞரின் வாழ்க்கையையே

காட்டுவதாகும் "ஒப்புரவறிதல்" என்னும் வள்ளுவரின் உயர்ந்த கோட்பாட்டையும் "ஒப்புரவு ஒழுகு"[12] என்னும் ஔவையார் வாக்கையும் உட்கொண்டதாகும். கவிஞன் நானூறு, அறுசீர் ஆசிரிய விருத்தங்களைக் கொண்ட அழகிய குறுங்காவியம் ஆகும்.

## தமிழன் (நானூறு)

இதுவும் நானூறு அறுசீர் ஆசிரிய விருத்தங்களைக் கொண்ட சிறு காவியம்.

"கலையழகு கொஞ்சக் கவிஞர் வடித்துள்ள பாத்திரங்கள் நம் சிந்தனையை விட்டகலாத சிரஞ்சீவிச் சித்திரங்கள்" ஆகும்.

*"தமிழனின் தலையாய பண்புகளைக் குறிப்பிடும் போது*
*தஞ்சமென் றொருவன் தாளில் தாழாதான் தாழ்ந்தோர் தம்மை*
*வஞ்சமென் றெதுவும் செய்து வருத்தாதான் வஞ்ச கர்பால்*
*பஞ்சமென் றிரந்து கஞ்சி பருகாதான் பகுத்தா ராய்ந்த*
*நெஞ்சமென் னும்சான்று ஒன்றை நீக்காதான் தமிழன் என்பார்"*[13]

எனத் தமிழனின் தலையாய பண்புகளைக் குறிப்பிடுகிறார். வெள்ளியங்காட்டான் மிகவும் விரும்பிய இலக்கியம் புறநானூறு. அந்நூலில் பல பாடல்களை நாங்கள் பாடம் கேட்டுள்ளோம். "தரமான வாழ்வு காணத் தனையர்க்குத் தமிழ்த்தாய் தந்த வருமானம் வணங்கி வாழார் வரலாறு"[14] என்று புறநானூற்றிற்குப் புகழாரம் சூட்டுகிறார். தொன்மைத் தமிழ் நாட்டுச் சிறப்பைப் புறநானூறு 335-ஆம் பாடலும் தன் மானத் தமிழன் சிறப்பு 239 ஆம் பாடலும் தமிழன் கோட்பாடாக அகிம்சை, சகோதரத்துவம், சுதந்தரம், சமத்துவம் என்னும் நான்கு கொள்கைகள் எனக் கூறி "நாட்டில் ஏழை என ஒருவன் இல்லாது வாழ்வாங்கு வாழ்வதே தன்மானத் தமிழன் கண்ட பண்டைய அரசியல் நெறி; புறநானூறு புகட்டுபவை"[15] இவை எனக் கூறுகிறார் ஆசிரியர்.

"புண்ணியக் கதைகள் என்ற புழுகினில் புலனைப் போக்கி மண்ணினில் உழைத்து வாழும், மக்களின் மானத்தைக் காக்க வேண்டுமேல் "சுருங்காது குறளைக் கற்றுச் சுயமாக ஆய்ந்தோர் எல்லாம் வருங்கால ஒளியாய் ஒன்றி வையத்தில் வாழ்வார் அப்பா"[16] என்று திருக்குறளைக் கற்று வாழ்வில் ஒளி பெற வழி காட்டுகிறார்.

அது மட்டுமின்றி "அப்பர் மற்றும் ஆழ்வார்கள் காட்டிய தெய்வநெறி "ஒப்புரவு" என்று உலகத்திற்குக் காட்டாமற் போயினரே" என்று வருந்துகிறார்.

*"ஒப்புரவு என்னும் சொல் தான் உலகுக் கோர் தெய்வம் என்றே*
*அப்பராழ் வார்கள் செப்பற்(கு) அறியாராய்ப் போன தாலே*
*செப்பரும் விதமாய் மக்கள் சீர்கெட்டுச் சிறுமை பட்டுத்*
*தப்புகள் பெருகி நாடே தாறுமா றாயிற்று இன்று"*[17]

என்று குறிப்பிடுகிறார்.

கோசல நாடு பற்றிய கம்பனின் கருத்தை
"கல்லாதான் இல்லை இந்தக் காசினி மீதென் றாயின்
பொல்லாத தெய்வப் பொய்கள் பொருள்மத பேத மெல்லாம்
செல்லாத தாகும் சேரச் செப்பஞ்செய்து அமைத்துச் செல்வம்
இல்லாதார் இல்லை என்ன இயங்கிடும் நாடு என்கின்றான்"[18]

என்று கூறுவதிலிருந்து அறியலாம். கம்பனின் கோசல நாட்டின் சிறப்பைக் கூறுமிடத்து வரும் பாடல்களை நினைவுறுத்துகிறது இப்பாடல்!

*"வால்காவி லிருந்து கங்கை வரையிலும் வழி நடத்தி*
*வேல்காத லித்த வீரவேளிர் தம் மகளிர் போல் முப்*
*பால்காவி லிருக்கை கோலிப் பழம் புறநானூறு உண்ணுங்*
*கால் காதலித்தேன் நும்மை, கவின்விளக் காதற்கென்றே"*[19]

என வேல் காதலித்த வீரர் எனத் தமிழர் வீரத்தையும் காதலையும் போற்றுகிறார்.

**அறிஞன் (நானூறு)**

அறிஞனில் எண்குணத்திற்கேற்ப எட்டுப் பாத்திரங்களை அமைத்துள்ளார்.

"கோளில் பொறியில் குணமிலவே எண் குணத்தான் தாளை வணங்காத் தலை"[20] என வள்ளுவர் குறிப்பிடுவார். எட்டுக் குணங்களாகிய குடிப்பிறப்படுத்துப் பனுவல் சூடி என்னும் சங்கப் பாடலில் உள்ள எட்டுக் குணங்களை அறிஞருக்குள்ள குணங்கள் என விளக்குவதாக உள்ளது. குடிப்பிறப்பு, ஒழுக்கம், வாய்மை, காதலின்பம், நடுவுநிலைமை, அழுக்காறு இன்மை, அவாவின்மை, மேலோர் பேரவை உடனிருத்தல் என்பன அவை"[21] என்பார்.

"பேரார்வம் என்னும் வலுவான பெரியவடம் நம்மனைவரையும் சுற்றிப் பிணைத்துக் கொள்ளட்டும்! தூய அன்பெனும் சந்தனமரம் எரிந்து ஒளி பரப்பட்டும்; மணம் கமழட்டும்; நம் ஒன்றுபட்ட உறுதியாலும் உழைப்பாலும் நமது தாயகம் பூத்துக்குலுங்கட்டும்; ஒரு எழில்மிகு புதுமைப் பூங்காவாகிப் பொலியட்டும்! இவையாவும் ஆனபின் இம்மாநிலம் தன் மகனாகிய என்னை அள்ளியெடுத்து அணைத்துத் தன்னகத்தில் மறைத்து வைத்து மனம் மகிழட்டும்!" - என்ற இக்கன்னடக் கவிதையை அறிஞன் நூலில் அறிமுகப்படுத்துகிறார்[22].

வேணி, குமரன், மாணிக்கம், நித்திலன் என நல்ல பெயர்களைக் கொண்டு காவியம் நிகழ்கிறது. கம்பனின் கவியோட்டம் போல இந்நூலின்.....

"*அலைபாயும் கடலாய்க் கற்பது) அனைத்தையும் வாழ்ந்து கற்றும்*
*கலையாயும் கவிஞர்க் கேனும் கன்னியர் கருத்தில் காணும்*
*நிலையாய இயலா ஒன்றுஇந் நிலந்தனில் நெடுநாள் தொட்டுத்*
*தலையாய அறிஞர் சாற்றும் தமிழுக்குத் தாழ்வுண்டாமோ*"[23] என்று

தமிழுக்குத் தாழ்வு இல்லை எனச் செம்மொழி தமிழின் ஏற்றத்தை இந்தக் கொங்குநாட்டுக் கம்பன் சிறப்பாகக் குறிப்பிடுகின்றார்.

(தொடரும்)

இயற்கை உரங்களைப் பயன்படுத்துவதன் மூலம் மண்ணை வளமாக்க முடியும் என்ற கருத்துகளை தன் வாழ்வின் இறுதிநாள் வரை முழங்கியதுடன் அதனைச் செயல்பட்டுத்தியவர் வேளாண் விஞ்ஞானி நம்மாழ்வார். அவரது வேளாண்மைக் கோட்பாடுகளை வருங்கால விவசாயிகள் கட்டாயம் கடைபிடிக்கவேண்டும். மரங்களின் மூலம் பல்வேறு பலன்களைப் பெறும் மனிதன் அவற்றைப் பாதுகாப்பதைக் கடமையாகக் கொள்ள வேண்டும்.

**மகிழ்ச்சி ஊற்றெடுக்க...** இயற்கை உணவுகளை உண்பதன் மூலம் நோய்கள் ஏற்படாமல் உடலைக் கோயிலாக வைத்திருக்க முடியும். கால்நடைகள், தாவரங்கள், புழுக்கள், பூச்சிகளுக்கும் வாழ்க்கை உண்டு. அனைத்து உயிரினங்களையும் நேசித்தால் உங்கள் மனதில் மகிழ்ச்சி ஊற்றெடுக்கும். உணவால் மட்டுமல்ல காந்தியைப் போல் உணர்வாலும் சைவமாக இருக்க முயற்சிக்க வேண்டும்.

**- தவத்திரு பொன்னம்பல அடிகளார்**

சென்னை, சர்வதேச தமிழ் தாவர உணவாளர்கள் மாநாடு நன்றி : தினமணி - 1.12.2014

# இனிய தமிழுக்கும் திருக்குறளுக்கும் ஏற்றம்தர முழக்கமிடும் திரு. தருண் விஜய் எம்.பி.



இந்திய மாநிலங்களவை உறுப்பினரான திரு. தருண்விஜய், சமஸ்கிருத மொழிக்கு அதிக முக்கியத்துவம் தரப்படும் வடக்கு மாநிலமான உத்தரகண்ட் மாநிலத்தவர். பாரதீய ஜனதாகட்சியினர். இப்பெருமகனார் மாநிலங்களவையில் தமிழின் சிறப்புகளை பட்டியலிட்டுப் பேசியதுடன் நமது குருமகாசந்நிதானம் அருள்நெறித்தந்தை 1962ல் இருந்து வழியுறுத்தி வந்த திருக்குறள் இந்திய தேசிய நூலாக வேண்டும் என்பதையும் திருவள்ளுவர் திருநாளை இந்திய மொழிகள் நாளாக அறிவிக்க வேண்டுமென்பதையும் நடுவணரசுக்கு வற்புறுத்தியுள்ளார்.

மேலும் வடமாநிலங்களில் உள்ள கல்வி நிறுவனங்களில் தமிழ்மொழியை ஒரு விருப்பப் பாடமாகக் கற்பிக்க வேண்டும்.அசோகர், விக்கிரமாதித்தன் ஆகியோர் மட்டுமே இந்தியப் பேரரசர்கள் என்று கருதிவிடக்கூடாது. தமிழ்நாட்டுச் சேர, சோழ, பாண்டிய வேந்தர்கள் உலகின் பல பகுதிகளை ஆட்சி செய்தவர்களாதலால் அவர்களின் வரலாறும் கற்பிக்கப்பட வேண்டும். உலகின் மிகப் பழைமையான தமிழ் மொழிக்குப் பெருமை சேர்க்கும் வண்ணம் உலகப் பொதுமறையாக விளங்கும் திருக்குறளை வடமாநிலப் பள்ளிகளில் கற்றுத்தரவேண்டும். திருக்குறளை இந்திய தேசிய நூலாக்க வேண்டும் எனத் தமிழ் மொழியையும் திருக்குறளையும் முதன்மைப்படுத்தி பல கோரிக்கைகளை வலியுறுத்தி வருகிறார்.

இவ்வாறு தமிழ்மொழிக்கும் திருக்குறளுக்கும் ஏற்றம்தர வேண்டுமென அழுத்தமாகக் குரல் கொடுத்துவரும் திரு. தருண்விஜய் அவர்களை, "மக்கள் சிந்தனை" இதழ் போற்றியும் பாராட்டியும் மகிழ்கிறது.

அப்பெருமகனாரின் முயற்சிகளுக்குத் தோள்கொடுக்க வேண்டியது உலகத் திருக்குறள் பேரவை உறுப்பினர்களின் கடமையாகும். ஒவ்வொரு தமிழனின் கடமையுமாகும்.

**- ஆசிரியர்**

# குன்றக்குடியில் உலகத் திருக்குறள் பேரவைச் செயற்குழுக் கூட்டம்

குன்றக்குடியில் ஆதீனத் திருமடத்தில் திருவள்ளுவராண்டு 2045 ஐப்பசித் திங்கள் 2 ஆம் நாள் (19.10.2014) ஞாயிற்றுக்கிழமை காலை 10.30 மணியளவில் உலகத் திருக்குறள் பேரவையின் செயற்குழுக் கூட்டம் பேரவைத் தலைவர் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

பேரவையின் துணைத்தலைவர் திருச்சிராப்பள்ளி திரு.சு.முருகானந்தம், முதன்மைப் பொதுச் செயலாளர் மதுரை திரு.ந.மணிமொழியனார், நிர்வாகப் பொதுச் செயலாளர் புதுக்கோட்டை புலவர் திரு.தி.சு. மலையப்பன் ஆகியோர் முன்னிலை வகித்தனர். 40க்கும் மேற்பட்ட செயற்குழு உறுப்பினர்கள் கலந்து கொண்டனர்.

மணப்பாறை புலவர் திரு. நாவை.சிவம் இறைவாழ்த்துப் பாடினார். பொதுச்செயலாளர் புலவர். திரு.தி.சு. மலையப்பன் வரவேற்புரை யாற்றினார், முதன்மைப் பொதுச்செயலாளர் திரு. ந. மணிமொழியனார் தொடக்கவுரையாற்றினார். தலைவர் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் தலைமையுரையாற்றினார். பின்னர் ஒவ்வொரு மாவட்டப் பிரதிநிதிகள் தத்தம் கருத்துக்களை எடுத்துரைத்தனர்.

இன்றைய நிலையில் பேரவை இயக்கம் மேலும் சிறப்பாக இயங்குவதற்குரிய செயல் திட்டத் தீர்மானங்கள் நிறைவேறின. பின் தலைவர் ஆற்றிய தொகுப்புரை உறுப்பினர்களுக்கு ஊக்கவுரையாக அமைந்தது. நன்றியுரைக்குப் பின் நாட்டு வாழ்த்துடன் கூட்டம் இனிதே நிறைவேறியது. பேரவையின் இளைஞரணித் தலைவர் முனைவர்.சொ.சேதுபதி கூட்ட நிகழ்ச்சிகளின் இணைப்புரையாற்றினார்.

---

# இம்மைச் செய்தன யானறி நல்வினை உம்மைப் பயன்கொல்! - சரியா?

(தமிழாகரர். தெ. முருகசாமி)

சோழ நாட்டை விட்டுச் சென்ற கோவலன் பாண்டிய நாட்டின் மதுரையம்பதியைச் சுற்றிப் பார்த்துவிட்டு மீண்டும் புறஞ்சேரிக்கு வந்தபோது மாடலமறையோனைச் சந்திக்கின்றான்.

மாடலன், கோவலனை முன்பே அறிந்திருந்தானாதலின் அவனின் நிலைகண்டு கழிபேரிரக்கங் கொண்டு இப்படி இருந்த நீயா இப்படியாகிவிட்டாய்? என வருந்திக் கூறுங்கால்,

*இம்மைச் செய்தன யானறி நல்வினை*
*உம்மைப் பயன்கொல் ஒருதனி யுழந்துஇத்*
*திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது*
*விருத்தகோ பால நீயென வினவ,* (அடைக்.91-94)

என வியக்கின்றான்.

மறையோன் சோழநாட்டினன், தலைச்செங்காடு என்ற ஊரினன். கோவலனின் குடும்பத்தாருடன் பெரிதும் கேண்மையுடையவன். குமரித்துறை நீராடி வடக்கே மீளும் நிலையில் மதுரைப் புறஞ்சேரியில் கோவலனைச் சந்திக்கின்றான்.

முதறிவுடைய கோவலனே! நீ இப்பிறவியில் செய்தன எல்லாம் நல்வினைகளே என்பதை நான் அறிவேன்! ஆனால் மாணிக்கக் கொழுந்துபோன்ற கண்ணகியோடு நடைமெலிந்து இவண் வந்தது உனது முற்பிறப்பினது தீவினைப் பயனோ? - என்றான் மாடலன்.

இதில் கோவலனது குடும்ப நிகைளையெல்லாம் இம்மையில் நன்கு அறிந்ததாகவே ஒப்புக்கொண்டு கூறும் மாடலன், கண்ணகியைக் கைவிட்டு மாதவியுடன் வாழ்ந்த கோவலனின் நிலையைப் பாவம் எனக் கருதாமல் விட்டது ஏன்? எனத் தெரியவில்லை. ஏனெனில் கண்ணகியை மணந்ததும், பின்னர் அவளைப் பிரிந்து மாதவியுடன் வாழ்ந்ததும்

மாடலனுக்கும் தெரியும் என்பதால் அங்ஙனம் தெரிந்தவற்றுள் மாதவியுடன் வாழ்ந்தபோது கோவலன் நிகழ்த்தியதைக் கூறியே இம்மைச் செய்தன யானறி நல்வினை என்றானெனில் கண்ணகிக்குத் துரோகம் செய்ததை ஒரு பொருட்டாகக் கருதவில்லை எனத் தெரிகிறதன்றோ!

கோவலன் மாதவியுடன் வாழ்ந்தபோது தன் மகள் மணிமேகலைக்கு நடத்தும் பெயர் சூட்டு விழாவில் ஒரு முதியவரை யானையின் இடரிலிருந்து காத்ததற்காகக் கருணை மறவன் எனப் பெயரிடுகிறான். இது எதிர்பாராமல் நடந்த ஒருநாள் நிகழ்ச்சி. ஆனால் காலமெல்லாம் கண்ணீரும் கம்பலையுமாக கண்ணகியை வீற்றிருக்கச் செய்த பெரும் பாவம் பற்றி மாடலன் உணரவில்லையே! கண்ணகிக்குக் கருணை புரியாதது இம்மைச் செய்த நல்வினையா?

கணவன் பிரிந்து வடநாடு சென்றுவிட்ட நிலையில் தவித்த மனைவியின் துயர் துடைக்கத் துணையாக இருந்த கோவலன் தன் பிரிவால் மனைவியாம் கண்ணகி வருந்துவாளே என உணராதிருந்தது கோவலன் செய்த இம்மை நல்வினையா?

பொய்க்கரி சொன்னவனைப் பூதம் புடைத்துண்டபோது வருந்திய தாய்க்குக் காலமெலாம் செல்வனாகப் புரக்க முன்வந்த கோவலனுக்குத் தன்மனைவி தன்துணையின்றித் துன்பப்படும் வெறுமையை அறியாதவனாக இருந்தது இம்மைச் செய்த நல்வினையா?

மூன்று வகையாக அறிந்ததைக் கூறிய மாடலனுக்குக் கோவலன் செய்த துரோகம் நினைவுக்கு வராததும் மாடலனின் ஊழ்வினையோ!

மாடலன் கூறிய மூன்று நிகழ்வுகளையும் கண்ணகியறிந்திருக்கக் கூடும். ஆனால் அவற்றையெல்லாம் தன் நெஞ்சத்துள் புதைத்துவிட்ட நிலையில்தான் கோவலனோடு புறப்பட்டு வந்தாள். அவளிருக்கும் போதே நேருக்கு நேராக மாடலன் கூறியது அவனின் ஒளிவு மறைவற்ற உள்ளத்தைக் காட்டுவதாக எண்ணினாலும் கண்ணகிக்கு மீண்டும் பழைய நினைவுகளைத் தூண்டிவருத்தச் செய்ததாகுமன்றோ?

பொதுவாக இம்மூன்றையும் கூறாமல் உம்மைப் பயன்கொல்! என மட்டும் கூறிக் கோவலனது நிலைக்கு வருந்தியிருக்கலாமன்றோ! இங்ஙனம் அடுக்கடுக்காகக் கூறியது கண்ணகியைக் காயப்படுத்துவதாக மறைமுகமாக அமைந்துவிட்டதன்றோ!

மேலும் அணையப்போகும் விளக்கு தான் அணைவதற்கு முன் மிகப்பிரகாசமாக எரியும் என்ற வாதத்திறமையை ஒப்புமை காட்டிக் கோவலன் கொலையுண்ணுதற்கு முன் அவனது பெருஞ்சிறப்பைக் கொலைகளக் காதைக்கு முன்னுள்ள அடைக்கலக்காதையில் கூறுவதாக இளங்கோவின் பாத்திறைனச் சிலர் பாராட்டுவர். இதை இலக்கிய உத்தியாகவும் கூறுவர். ஆனால் இவற்றின் புதைபொருளில் கோவலனைப் புகழ்வது போல் பழித்த திறனே வெளிப்படுகிறதென்பதே உண்மை.

இக்கருத்தை மாடலன் கூறிய உம்மைப் பயன் கொல்! என்பதாலும் உணரலாம். மேலும் விருத்தகோபால! என்றதாலும் உணரலாம். மூதறிவுடையோய் என்று விளிக்கும் விளியில் புகழ்வதுபோல் பழித்த தொனி அடக்கமாக உள்ளது. கட்டிய மனைவியைத் தவிக்கவிட்டுவிட்டு, இன்னொருத்தியோடு தான தருமம் செய்வது எந்த வகையில் பகுத்தறிவுக்குகந்தது எனக் கேளாமல் கேட்பதான தொடரே "விருத்த கோபால" என்பது. கோவலனைக் கோபாலன் எனப்பட்டாலும் விருத்த என்றது மூதறிவுடையோய் எனப்படும். இங்ஙனம் கூறியதை ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப் பேதையிற் பேதையாரில் (835) என்ற குறட்கருத்துக்குப் பொருந்தலாமன்றோ! பேதை என்பதாகக் கூறாமல் பேதையில் பேதை என்றதுவே கோவலனைக் குற்றப்படுத்த பொருந்துவதாக உள்ளது. எனவே அறிவுள்ளவன் செய்யும் செயலா இது எனச் சொல்லாமல் சொல்லிப் பழிப்பதாக உள்ளதன்றோ! மாடலன் புகழ்ச்சியாகக் கருதிக் கூறுவது போல் கூறினாலும் அவனையறியாமலே அவனது சொற்கள் கோவலனை மறைமுகமாகவே குற்றப்படுத்தின என்பதில் ஐயமில்லை.

இங்ஙனம் சிந்திப்பதில் வேறொரு கருத்தும் ஊடாடுகிறது. அறிவிருந்தும் உம்மைப் பயனான ஒன்றுதான் முந்திக் கொண்டதோ?

என்பதுவே அது. இந்த ஊழ்வினை பற்றிய கருத்திலும் இம்மைச் செய்தன யானறி நல்வினை என்பதைப் பொருத்திப் பார்க்க இயலவில்லை!

வடபுலத்துக் கலிங்கநாட்டுச் சிங்கபுர பரதன் கபிலபுரச் சங்கமனை ஒற்றன் எனக்கூறி மன்னனால் கொல்வித்தான். கொலையுண்ட சங்கமன் மனைவி நீலியின் சாபத்தின்படி, பரதனும் அவன் மனைவியும் கோவலன் கண்ணகியாகிச் சோழநாட்டில் பிறந்தனர்.

தேவலோகத்தில் சயந்தனும் உருப்பசியும் (ஊர்வசி) கொண்ட சாபத்தால் சோழநாட்டில் மூங்கிலாக, மாதவியாகப் பிறக்கின்றனர்.

இவர்களுள் கோவலன், கண்ணகி தொடர்பு ஊழ்ப்பயனாயது என்றாலும் மாதவி கோவலன் இணைவுக்கு ஊழ்வினையில் யாதொரு தொடர்பும் இல்லாதபோது மாதவியோடு இருந்து மணிமேகலைக்குப் பெயர் சூட்டும் விழா நடத்தியதையெல்லாம் உள்ளடக்கிய வகையில் கூறிய மாடலன், "உம்மைப் பயன் கொல்!" என்றதன் முழுமையையறிய முடியவில்லை!

ஆக, கோவலனை நன்கறிந்தவனாக இருந்தும் மாடலன், அவனைக் கண்டிக்காமல் பாராட்டும் விதமாய் இம்மைச் செய்தன யானறி நல்வினை எனக்கூறியதோடு கோவலனது செயலை அங்கீகரிக்கும் விதமாய் "உம்மைப் பயன்கொல்?" எனக் கூறியது பொருந்துவதோ?

மேலும் இங்ஙனம் கண்டிக்காததுதான் சமூக வழக்கம் என மாடலன் மூலமாக மறைமுகமாய் இளங்கோ கருதுகிறாரோ என எண்ணத் தோன்றுகின்றதன்றோ!

தாய் தவிட்டுக்கு அலைய, மகன் கும்பகோணத்தில் கோதானம் கொடுக்கப் போனானாம் என்றதொரு பழமொழியுள்ளது போலக் கட்டிய மனைவியைத் தவிக்கவிட்டுவிட்டு இன்னொருத்தியோடு தானதருமம் செய்வதுதான் மாடலன் அறிந்த கோவலனின் இம்மைச் செய் நல்வினைகளா?

---

# வடமாநிலப் பள்ளிகளில் அடுத்த ஆண்டு முதல் திருவள்ளுவர் பிறந்த தினம்.
## நடுவணரசு அமைச்சர் ஸ்மிருதி இரானி தகவல்

வடமாநிலங்களில் உள்ள பள்ளிகளில் அடுத்த ஆண்டு முதல் திருவள்ளுவர் பிறந்த தினம் கொண்டாடப்படும் என்று மத்திய மனிதவள மேம்பாட்டுத்துறை அமைச்சர் ஸ்மிருதி இரானி தெரிவித்தார்.

இது தொடர்பாக மாநிலங்களவையில் உத்தரகண்ட் மாநிலத்தைச் சேர்ந்த பாஜக உறுப்பினர் தருண் விஜய் வெள்ளிக்கிழமை பதிவு செய்த கோரிக்கையைத் தொடர்ந்து மேற்கண்ட தகவலை ஸ்மிருதி இரானி வெளியிட்டார். மாநிலங்களவையில் தருண் விஜய், வெள்ளிக்கிழமை பேசியதாவது :

ஒரு நாடு வளம் பெற வேண்டுமானால் அதில் பேசப்படும் மொழிகள், கலாச்சாரம் மதிக்கப்படவேண்டும். நாகரிகமும், உறவுகளும் வலுப்பெற மொழிகள் தடையாக இருக்கக்கூடாது. அவை பாலமாக இருக்க வேண்டும். மொழி என்பது எழுத்துகளையும், வார்த்தைகளையும் மட்டுமே கொண்டது அல்ல. அது ஒரு சமுதாயத்தின் நாகரிகம், உணர்வுகள், வண்ணங்கள், கலைகள், கலாசாரம் ஆகியவற்றின் பிரதிபலிப்பாகும்.

இந்தியாவின் சிறந்த அறிவாற்றலையும் அடையாளத்தையும் உலகம் முழுவதும் பிரதிபலிக்கும் வகையில் தமிழ் போற்றப்படுகிறது. "பூமியின் நினைவுகள்" என்ற பதிவை யுனெஸ்கோ அமைப்பு சேகரித்த போது, இந்தியாவின் அடையாளமாக "தமிழ்" மொழியை 2005-ல் தேர்வு செய்தது. அப்படிப்பட்ட தமிழ் மொழி இந்திய மொழிகளுக்கெல்லாம் தாய் போல விளங்குகிறது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நம் நாட்டில் வாழ்ந்தவர் திருவள்ளுவர். உலகம் போற்றும் பொதுமறையை அவர் தமிழ் மொழியில்தான் வழங்கினார். அதன் பெருமையையும், பயனையும் உணர்ந்த உலக நாடுகள் பலவும் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளை அவற்றின் தாய்மொழிகளில் மொழி பெயர்த்து, தங்கள் குடிமக்களுக்குக் கற்பித்து வருகின்றன.

ஆனால், வடமாநிலங்களின் பல நகரங்களுக்கு நான் செல்லும் போது அங்குள்ள இளைய தலைமுறையின்ரிடம் "திருவள்ளுவரை தெரியுமா? திருக்குறளைப் படித்தீர்களா?" என்று கேட்பேன். ஆனால் "அது என்னது?" என்று அவர்கள் வியப்புடன் என்னிடம் கேட்கின்றனர். இது துரதிருஷ்டவசமானது.

நம் நாட்டில் குறிப்பாக வடமாநிலங்களில் வால்மீகி, துளிசிதாஸ் ஆகியோரை மட்டும் நாம் மொழிப்புலமை வாய்ந்தவர்களாகப் போற்றுகிறோம். அவர்கள் மட்டுமே இந்தியாவின் அடையாம் அல்ல. திருவள்ளுவர், கண்ணகி, சுப்பிரமணியபாரதி போன்றோரைப் பற்றிக் குறிப்பிடாமல் இந்தியாவின் அடையாளத்தை நம்மால் முன்னிலைப்படுத்த முடியாது. எனவே, தமிழை கௌரவிக்கும் வகையிலும் திருக்குறளின் பெருமையை இந்தியர்களும் அறிந்து கொள்ளும் வகையிலும் திருவள்ளுவர் பிறந்த நாளை அடுத்த ஆண்டு முதல் அனைத்து வடமாநில பள்ளிகளிலும் கொண்டாட வேண்டும். இதுபோன்ற நடவடிக்கைகள்தான் தென்னகத்துக்கும் வடக்குக்கும் இடையிலான பாலத்தை வலுப்படுத்தும் என்றார் தருண் விஜய்.

முன்னதாக, தருண் விஜய் திருக்குறள் குறித்து பேசத் தொடங்கும் போது "தமிழில் கூறி ஹிந்தி மொழியில் உரையை வாசித்தார்". இதேபோல உரையின் இடையே, திருக்குறளின் முதலாவது குறளான,

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

என்று கூறி திருவள்ளுவரின் சிறப்பை விளக்கினார்.

**உறுப்பினர்கள் ஆதரவு :**

அவர் பேசி முடித்தபோது, தமிழகத்தைச் சேர்ந்த அதிமுக உறுப்பினர்கள் நவநீதகிருஷ்ணன், கே.ஆர்.அர்ஜுனன், டாக்டர். மைத்ரேயன், டி. ரத்னவேல், விஜிலா சத்யானந்த், ஏ.கே. செல்வராஜ், எஸ்.முத்துக்கருப்பன், திமுக உறுப்பினர்கள் கனிமொழி, திருச்சி சிவா உள்ளிட்டோர் "தங்களையும் தருண் விஜய் கோரிக்கையுடன் இணைத்துக்கொள்ள வேண்டும்" என்று அவையில் பதிவு செய்தனர்.

ஐக்கிய ஜனதா தளம் தலைவர் சரத்யாதவ், சமாஜ்வாதி கட்சியின் மூத்த தலைவர் ராம்கோபால் வர்மா, திரிணமூல் காங்கிரஸ் உறுப்பினர் அகமது ஹசன், காங்கிரஸ் உறுப்பினர் சுதர்சன நாச்சியப்பன் உள்ளிட்டோரும் தருண் விஜய் முன்வைத்த கோரிக்கையை மேஜையைத் தட்டி வரவேற்றனர். இதைப் பார்த்த அவையில் இருந்த மத்திய மனித வள மேம்பாட்டுத் துறை அமைச்சர் ஸ்மிருதி இரானி, தருண் விஜய் கோரிக்கையை ஆமோதிக்கிறேன் என்று கூறினார்.

**ஸ்மிருதி இரானி உறுதி :**

பின்னர் மாநிலங்களவை அலுவல் முடிந்ததும் தருண் விஜயை தனது அலுவலகத்துக்கு வரவழைத்த ஸ்மிருதி இரானி, "திருக்குறள் பற்றியும் திருவள்ளுவர் பற்றியும் நானும் அறிந்துள்ளேன். நாம் செய்யத் தவறியதை நாடாளுமன்றத்தில் அருமையாகச் சுட்டிக்காட்டி, உணர்த்தியுள்ளீர்கள். உங்கள் கோரிக்கைப் படியே அடுத்த ஆண்டு முதல் வடமாநிலப் பள்ளிகளில் திருவள்ளுவரின் பிறந்த நாளைக் கொண்டாட உத்தரவிடுகிறேன்" என்றார்.

**வாழ்த்து :**

இதற்கிடையே, தில்லி, தமிழ்ச்சங்கம் சார்பில் பொதுச் செயலர் கண்ணன், தில்லி முத்தமிழ் பேரவைப் பொதுச்செயலாளர் இரா. முகுந்தன், கே.எம்.எஸ். கலை உலகம் சார்பில் முத்துசாமி ஆகியோர் தமிழின் பெருமையையும் திருக்குறளின் சிறப்பையும் தொடர்ந்து வலியுறுத்தி வருவதற்காக தருண் விஜய்யை வெள்ளிக்கிழமை மாலையில் தொடர்பு கொண்டு நன்றியும் வாழ்த்துகளையும் தெரிவித்தனர்.

நன்றி : தினமணி - 29.11.2014

*ஆக்கபூர்வமாகச் சிந்திக்கும் பழக்கம் உள்ளவர்கள் ஒரு வேலையை உடனே தொடங்குகிறார்கள். ஆனால், சுமாராக முடிக்கிறார்கள். இவர்கள் அனைவரும் நேரப்படி உழைத்து குறிப்பிட்ட காலத்திற்குள் பணியை முடிக்கத் தீவிரமாக முயற்சி செய்தால் எடுத்த காரியம் ஆரம்பம் போலவே சிறப்பாகச் செய்து முடிக்கப்பட்டு விடும்.*

**- ஜூலி ஆன் அமோஸ்**

# முருகா அருள்தர வா!

(ரெ.க. ராமானுசம்)



அழகின் வடிவே வாவாவா
அருள்செய் முருகனே வாவாவா
பழம்நீ முருகா வாவாவா
பார்வதி மைந்தா வாவாவா

எழில்மயில் வாகனா வாவாவா
எந்தையும் நீயே வாவாவா
எழில்சண் முகனே வாவாவா
எம்பெரு மானே வாவாவா

சுப்பிர மணியனே வாவாவா
சிவனின் புதல்வனே வாவாவா
அப்பனே கந்தனே வாவாவா
ஆறு முகனே வாவாவா

மலைவாழ் குமரா வாவாவா
மான்மகள் நாயகா வாவாவா
கலையின் தலைவா வாவாவா
கணபதி தம்பியே வாவாவா

கருணைக் கடலே வாவாவா
கார்த்தி கேயனே வாவாவா
திருவுளங் கனிந்து வாவாவா
தெய்வயா னையுடன் வாவாவா

என்றும் உனையே எழில்முருகா
இருகரம் கூப்பி வணங்குகின்றோம்
உன்புகழ் பாடும் அடியவர்க்கே
உவந்து அருள்தர வாவாவா!

---

# கொடிய மிருகம் எது?

(திருமையாதீனப் புலவர்.வித்துவான். தா. குருசாமி தேசிகர்)

இந்தக் கேள்விக்கு நபிகள் நாயகம் "நாக்கு" எனப் பதில் அளிக்கிறார். "ஒருமுறை அதை அவிழ்த்துவிட்டால், திரும்பக் கட்டுவது கடினம்" என்றும் அவர் கூறுகிறார். "எதைக் கட்டுப்படுத்தவில்லை என்றாலும் நாக்கைக் கட்டுப்படுத்துவது மிகவும் அவசியம்" என்று "நானே கேள்வி - நானே பதில்" என்ற பகுதியில் ஆனந்தவிகடன் வெளியிட்டுள்ளது.

எனக்குத் திருவள்ளுவர் என்ன சொல்கிறார் என்ற சிந்தனை எழுந்தது.

*"யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்*
*சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு"*
*"தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே*
*நாவினால் சுட்ட வடு"* - என்ற இரண்டு குறள்கள் திருவள்ளுவர் தந்த நன்கொடைகள்.

இவற்றை உள்வாங்கி வளையாபதிச் செய்யுள் "நா" பற்றி நவில்வதும் சிந்திக்கத்தக்கது.

*"ஆக்கப் படுக்கும் மருந்து*
*அளவாய்ப் பெய்விக்கும்*
*போக்கப் படுக்கும் புலைநரகம்*
*துய்ப்பிக்கும்*
*காக்கப்படுவனவும்*
*இந்திரியம் ஐந்தினும்*
*நாக்கல்லதில்லை*
*நனிவெல்லுமாறே"* என்ற பாடல்

"நாக்கு" ஆக்கல், அழித்தல், காத்தல், ஆகிய முத்தொழிலும் செய்யும் என்று சிந்திக்கப்பட்டது. பாண்டியன் நெடுஞ்செழியன் கோவலனைக் "கொண்டுவா" என்றதற்குப் பதில் "கொன்று வா" என நாதவறிச் சொல்லி, உயிர்விட்டதைச் சிலப்பதிகாரம் சித்திரிக்கும்.

சிற்றம்பல நாடிகளின் "சீடர்" ஒருவர், அறுபத்துமூவர் சீடரோடு, ஓர் இல்லத்தில் குருவோடு மகேஸ்வர பூஜையில் (உணவு அருந்தல்) நெய்க்குப் பதிலாக தவறுதலாக வேப்பெண்ணையை, சோற்றில் பெய்த போது, அவற்றை மற்ற சீடர்கள், நாச்சுவை பேணாது, தவச்சுவை பேணி அருந்தும்போது அவ்ஒரு சீடர் மட்டும் "வேப்" என்று சொல்ல எத்தனித்தபோது, குருவானவர், முழுவார்த்தையும் சொல்லவிடாமல், அவரைப் பார்த்து, தவச்சுவை அறியாது, நீ நாச்சுவைபேணியதால், மகேஸ்வரபூஜையில் இருந்து வெளியேறச் சொன்ன வரலாறு சித்தர்களுக்குள் நடந்த சம்பவமாகும். இதில் "நாச்சுவை கண்டவன் தவச்சுவை அறியான்" என்னும் உண்மை விளக்கம் பெறும்.

இதைத்தான் திருவள்ளுவர் "நாச்சுவை" ஒன்றே உணர்வாரைத் திட்டித் தீர்க்கிறார்; அவர் வாழ்ந்தால் என்ன? இறந்தால் என்ன? என்பார். நாச்சுவைவிரும்பிகளை. கல்வியினும் சிறப்புள்ள கேள்வியைப் பெறாதார், உணவுண்டு, உயிரோடிருப்பதால் நன்மையும், இறத்தலால் இழப்பதும் இல்லை என்பதனால், கல்வி, கேள்வி உடைய "நாவே" நல்வாழ்விற்குப் பயன்தரும் என்பது பெறப்படும்.

"கற்றல் கேட்டல் உடையார் பெரியார்" என்றார் காழிவேந்தர். அவரே, "நல்லவாறே உன் நாமம் சொல்ல வல்லவாறே வந்து நல்காய்" என்று வழிமொழிவார். நாவை நல்வழிக்குத் திருத்தி ஆள்வார் நம் சம்பந்தப்பெருமானார்.

திருஞானசம்பந்தர், ஆமாத்தூர் என்ற தலத்துக்குப் போய், பெருமானை வழிபட்டார். அத்தலத்து அன்பர்கள் பலரும், விவசாயம் செய்பவர்கள். அவர்கள் அனைவரும் நாச்சுவை மட்டும் அறிபவர்கள். அவர்கள் அனைவரும் ஆளுடையபிள்ளையை வரவேற்று, ஆசிவழங்க வேண்டினர். சம்பந்தர், அவர்களைப் பார்த்து, "உங்கள் நாவை இன்னும் நல்ல காரியத்துக்குப் பயன்படுத்தவில்லை" என்றார்.

அப்படி என்றால் "என்ன செய்வது" என்று விவசாயிகள் வினவ, "சிவாய நம" என்று சொல்லுங்கள் – அதுவே நல்லகாரியம் என்றார்.

"இல்லை என்றால் என்ன" என்று எதிர்வினாத் தொடுத்தனர். **"சிவநாமம்"** சொல்லாத "நா" அனைத்தும் வாய்ச்சுவை மட்டும், அறிந்து வெறுமனே கிடப்பதால் "நா" இருந்தும் அனைவரும் ஊமைகள்தான்? என்றார். அதைக்கேட்ட அனைவரும் **"இப்பொழுதுதான் நல்வாழ்வு பெற்றோம்"** என்று சம்பந்தரை, வணங்கி ஆசிபெற்றனர். அவ் ஆமாத்தூர் பாடல் இது –

*"ஆறாத தீயாடி ஆமாத்தூர் அம்மானைக்*
*கூறாத நாவெல்லாங் கூறாதநாக்களே"*

சிவநாமம் உச்சரிக்காத "நா" இருந்தும், ஊமையே என்ற எச்சரிக்கை – சுவை உணவு உண்பார் உணரவேண்டியதாம்.

"நாவைக் கொடிய மிருகம்" என்று உருவகம் செய்தாலும், "நாய், சிறுத்தை, சிங்கம் முதலிய மிருகங்களை, யானை உட்பட, பழக்கப்படுத்தினால் நம்வழிக்குக்கொண்டுவருவதை அநுபவத்தில் அறியலாம்.

அதைப்போல் "நாவை" நாத்திகம் பேசி நாத்தழும்பு ஏறாமல், **"நான்மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே"** என்ற சுந்தரர் திருவாக்கைக் கொண்டு, நாவைப் பயில்விக்க வேண்டும்.

அப்பரடிகள் "வாயே வாழ்த்து கண்டாய்" என்று நாவிற்கு ஆணை தருவார். நமக்குச் சேமிப்புப் பொருள் **"சிவபெருமானே"** என உணர்ந்து, **"சிவாயநம"** எனச் சொல்லி, மனதால் சிவத்தைத் தியானித்து, எப்போதும் ஓதிக் கொண்டிருந்தால், சிவத்தின் அருளைப் பெறலாம் என்று, அப்பரடிகள், திருப்பாதிரிப்புலியூர் திருவிருத்தத்தில் வழிமொழிவார்.

"திருவாய்ப் பொலிய் "சிவாயநம" என்று
நீறணிந்தேன்"

என்பதும், அதன் பயனாகச் **"சிவகதியைப் பெறலாம்"** என்பதும் அப்பரடிகள் அநுபவம். செந்தமிழ்க் குமரகுருபரர் காசிக் கலம்பகத்தில் தமிழ்படித்த – தமிழராய்ப்பிறந்த அனைவர்க்கும் "செவியறிவுறூஉ" அருளுகிறார். "நால்வரின் திருவாக்குகளை நாத்தழும்புஏற ஓதுங்கள்

அதன் பயனாகச் சிவலோகச் செந்நெறி கிட்டும்; உயிர்க்கும் நலம் உண்டாகும்" என்ற கருத்தில்,

*"தேத்தமிழ் தெளிக்கும் செந்நாப் புலவீர்,*
*முடிவினும் முடியா நலங்கொடுக்கும்*
*செந்நெறி வினவுதிராயின் இன்னிசைப்*
*பாத்தொடுத் தடுத்த பரஞ்சுடரை*
*நாத் தழும் பிருக்க ஏத்துமின் நீரே!"*

என்ற அருள்வாக்கு வரிகளால், நாவாகிய கொடிய மிருகத்தை, நமக்கு நன்றியுள்ள மிருகமாக ஆக்கிக்கொள்ளலாம் என்று உணர்ந்து நாவைக் காப்போமாக! நிறைவாக, சுந்தரர் பரவையுண்மண்டளித்தலத்துப் பெருமானை விளித்து விண்ணப்பம் செய்வதில்,

*"நாவாயால் உனையே நல்லன சொல்லுவோர்க்கு*
*ஆவா என்பரவை யுண்மண்டளி அம்மானே"* என்ற வரிகளின்

"நாவையுடைய வாயால் உன்னையே நல்லவற்றைச் சொல்லிப் புகழ்வேனாகிய எனக்கு ஐயோ! பாவமே என்று இரங்கி அச்சம் தீர்த்து அருள்க!" என்று கருத்து மிளிர்கிறது. சுந்தரர் "நாவாய்" என விதந்தோதியது, "அவையிரண்டும் பிறிதொன்றைச் சொல்ல முயலாமையை விளக்குதற் பொருட்டு" என்றும், "நல்லன" என்று அருளியது "பலருக்குச் செய்த திருவருட் செயல்கள்" என்றும், "சொல்லுதல்" என்பது "சொல்லிப் புகழ்தல்" என்றும் பொருட்புகல் தருமை ஆதீனஉரையால் தெரியவரும்.

*"நாமாறாது உன்னையே நல்லன சொல்லுவார்*
*போமாறு என்?"*
*"வாக்கு என்னும் மாலை கொண்டு உன்னைஎன்மனத்து*
*ஆர்க் கின்றேன்"*

என்பன போன்ற சுந்தரர் திருவாக்குகள், வாயையும் நாக்கையும் நல்வழிக்குத் திருத்தி ஆட்கொள்ளும் வல்லமையை நினைவுகூர்ந்து வணங்கி வாழ்த்துவோமாக!

---

# அருட்செல்வர் வழி வாழ்வோம்

**(மரு. பரமகுரு)**

பொள்ளாச்சி ஆலமரம் பொசுக்கென்று
    சாய்ந்ததந்தோ போயிற் றென்கோ?
வள்ளலார் காந்திமகான் வழிபோற்றி
    வாழ்ந்தபுறா பறந்த தென்கோ?
அள்ளூறித் தித்திக்கும் அமுதநூல்
    பற்பலவாய் அச்சி லேற்றிக்
குள்ளமனம் நிமிர்த்திடவே அள்ளியள்ளிக்
    கொடுத்தகரம் ஓய்ந்த தென்கோ?

தெள்ளியநற் கட்டுரைகள் "ஓம்சக்தி"
    இதழினிலே திகழ்தல் ஆமோ?
வள்ளலார் காந்திவிழா மாட்சிபெற
    இனியெடுக்க வாய்ப்பா ருண்டோ?
உள்ளுவதெல் லாம் உயர்வே உள்ளிஉள்ளி
    நாடுயர உரைப்பா ருண்டோ?
விள்ளரிய அருட்செல்வர் இழப்பதனால்
    வெற்றிடமே ஆன தம்மா!

ஆயிரமா யிரம் குடும்பம் வாழவைத்த
    பெருமகனார் அரிய கல்விக்
கோயில்பல எடுத்(து) அறிவு கொளுத்தியநற்
    கொழுஞ்சுடராய்த் திகழ்ந்த அண்ணல்
ஓயாத தெய்வபக்தி தேசபக்திக்(கு)
    உறைவிடமாய் ஒளிர்ந்த தீபம்!
தேயாத புகழ்சுமந்து சென்றஅருட்
    செல்வர்வழி நின்று வாழ்வோம்!

---

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# சிவஞான முனிவர் வலியுறுத்தும் சைவத்துக்கான திருக்குறள் அடிப்படை

(பேராசிரியர்.முனைவர். ச. கங்காதரன்)

*“ சீர்கொள் இறை ஒன்று உண்(டு) அத்தெய்வம் நீ என்று ஒப்பால்*
*சோர்வில் அடையால் தெளிந்தோம் – ஓரில்”*
*அகர முதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு*

சீர்கொள் இறை ஒன்று உண்டு என்பதை ஒப்புவமையால் தெளிந்தோம். அது நீ என்பதை சோர்வில் அடையால் தெளிந்தோம் என நிரல் நிரையாகத் தெளிந்தோம் என்பதை இரண்டு இடத்திலும் கூட்டிப் பொருள்கொள்ளவேண்டும்.

வயிரவர் வேண்டியபடி பிள்ளைக் கறி சமைத்தாகிவிட்டது. அவரும் உண்ணச் சித்தமாக அமர்ந்துவிட்டார். தம்முடன் அமர்ந்துண்ண “உமக்குப் பிள்ளை உண்டாயின் அழையும்” என ஆணையிடுகிறார். ஒரு கணம் தயங்கிய பரஞ்சோதி “இப்போது அவன் உதவான்?” என்று மட்டும் கூறுகிறார். அப்பூதி அடிகளும் கூட நாவரசர் “உம் பிள்ளையை அழையும்” என்றபோது இதே பதிலைத்தான் கூறுகிறார். இருவரும் யோசித்துப் பொய் பேசுகிறார்கள். மேலும் வயிரவர் கூப்பிடு எனச் சொன்னதும் தமது பொய்யை மறைக்காது மகனை அழைக்கவும் தொடங்கினார்.

*“ பிள்ளை உடன் உண்ணப்பேசி அழைத்தான் அன்பு*
*துள்ளும் சிறுத் தொண்டர் சோமேசா – உள்ளுங்கால்*
*பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த*
*நன்மை பயக்கும் எனின்”*

அப்பர்; முதலில் சமண சமயம் ஏன் புகுந்தார் என்ற வினாவை எழுப்பி, அதற்கு விடை கூறும் வகையில் சிவஞான முனிவர் பின்வருமாறு கூறுகிறார் :

*“முன்னர் அமண்மதத்து மூண்டரசர் பின் சைவம்*
*துன்னியதும் என்வியப்போ சோமேசா – உன்னுங்கால்*

*பேதைப்படுக்கும் இழவூழ் அறிவகற்றும்*
*ஆகலூழ் உற்றக் கடை"*
*"சமயங்களானவற்றின் நல்லாறு தெரிந்துணர்ந்தும் நம்பர்*
*அருளாமையினால் கொல்லாமை மறைந்துறையும் சமண்*
*சமயம் குறுகினார்"* என்ற பெரியபுராணச் செய்தியைப் படம் பிடித்துக் காட்டும் இச்சிறு வெண்பா இத்திருக்குறளுக்கு விளக்கவுரை கூறுகிறது அல்லவா?

வாழை இலை நறுக்கி வரப்போன அப்பூதி அடிகள் மகன் மூத்த திருநாவுக்கரசு அரவு தீண்டி இறந்து போனார். எனினும் தன் வணக்கத்துக்குரிய அப்பர் பெருமானுக்குச் செய்யும் மாகேசுரப் பூசை முட்டின்றி முடியவேண்டுமேயெனச் சவத்தை மறைத்துவிட்டு அதிதி பூசையைத் தொடங்குகிறார் அப்பூதி அடிகள். பையன் வரவில்லை, தவறு ஏதோ நடந்துள்ளது என்பதை அப்பூதியார் மறைத்தாலும் அப்பர் அடிகள் அறிகிறார். இந்நிகழ்ச்சி "சோமேசர் முது மொழிவெண்பா" நூலில் குறிப்பறிதல் என்னும் அதிகாரத்தில் உள்ள குறளுக்கு விளக்கமாகிறது.

*"அப்பூதியார் மறைத்தும் வாகீசர் அக்கரவை*
*துப்பால் அறிந்தனரே சோமேசா – இப்புவியில்*
*ஐயப்படா தகத்தது உணர்வானைத்*
*தெய்வத்தோ டொப்பக் கொளல்"*

என்னும் வைரமணியாக நூலில் கோக்கப்பட்டிருக்கிறது.

*"கல்லாதவரும் நனிநல்லர் கற்றார் முன்*
*சொல்லா திருக்கப் பெறின்"*

என்பது பொது அறிவுரை. வியாசர் விஷ்ணு பரத்வம் கூறிய நாவும் ஏந்திய கையும் செயலிழந்து போயின என்பது புராணச் செய்தி. பொது அறிவுரையை வலியுறுத்த வந்த நம் சுவாமிகள் வியாசர் புராணச் செய்தியை உவமை காட்டிப் பேசுகிறார்.

*"எல்லாம் உணர்ந்தும் வியாதன் இயம்பிய அச்*
*சொல்லாலே நாவயர்த்தான் சோமேசா – வல்லமையால்*
*யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்*
*சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு"*

என்பது அப்பாடல்.

சிறந்த நூலாயினும் சிந்தாமணி சிற்றின்பக் கதையே.பின் வாழ்வுக்குப் பயன்படாதது. இளமைமிடுக்கில் இன்பக் கதையைக் கேட்டிருந்த சோழன் அபயனை நல்லாற்றுப் படுத்த சேக்கிழார் பெருமான் பெரியபுராணம் யாத்தனர்.

*“சேக்கிழார் சிந்தாமணிப் பயிற்சி தீதெனவே*
*தூக்கி உபதேசித்தார் சோமேசா – நோக்கில்*
*பயனில் சொல் பாராட்டுவானை மகன் எனல்*
*மக்கட் பதடிஎனல்”*

என்று கூறுவார் நம் முனிவர்.

சிவஞான சுவாமிகள் ஒரு சுவாமியார் பற்றிக் கூறும் கோவணக் கதை நகைச்சுவை நிரம்பியது. தனது கோவத்தை எலி கடிக்கிறது என்பதனால் பூனையை வளர்த்து, அப்பூனையின் பொருட்டுப் பசுமாடு வாங்கி, அதைக் காப்பாற்ற மனைவியும் பெற்று சாமியாரின் கதையைப் பின்வருமாறு நகைச்சுவையுடன் கூறுவர்.

*“கோவணம் ஒன்று இச்சிப்பக் கூடினவே பந்தமெல்லாம்*
*தூவணம் சேர் மேனியாய் சோமேசா – மேவில்*
*இயல்பாகும் நோன்பிற்கு ஒன்று இன்மை உடைமை*
*மயலாகும் மற்றும் பெயர்த்து”*

இவ்வாறு அழகான உவமைகளைத் தமிழர் வரலாற்றில் இருந்தே எடுத்துக் கூறிக் குறள்நெறியைச் சின்னஞ்சிறுவரும் பயிலுமாறு 133 வெண்பாக்களில் ஆன ஒரு சிறு நூலை யாத்துத் தமிழ் மக்களுக்குப் பரிசளிக்கிறார் சிவஞான முனிவர்.

சிவஞான பாடியத் தொடக்கத்தில் முதலில் திருமுறைப் பாடல்களுக்கு அடுத்து முதற்குறளை அமைப்பதன் மூலம் திருக்குறள் அடிப்படையை உணர்த்துகிறார். திருத்தொண்டர் வாழ்வுக்கு திருக்குறள் அடிப்படை என்னும் உண்மையை சோமேசர் முதுமொழி வெண்பா என்னும் நூலில் விளக்குகிறது. சிவஞான சித்தியார் உரையில் சமயத்துக்கும் அறத்துக்கும் உள்ள தொடர்பை இணைத்து விளக்குகிறார். இந்த சமய – அறம் இணைப்பு மூலம் சைவத்துக்கும் திருக்குறளுக்கும் இடையே உள்ள பிரிக்கமுடியா உறவை விளக்குகிறார்.

*"ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் உபசாரம் உறவு சீலம்*
*வழுக்கிலாத் தவம் தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை*
*அழுக்கிலாத் துறவு அடக்கம் அறிவொடு அர்ச்சித்தல் ஆதி*
*இழுக்கிலா அறங்கள் ஆனால் இரங்குவான் பணிஅறங்கள்"*

– சிவஞான சித்தியார் சுபக்கம் – 113.

ஒழுக்கம் முதலிய பதினாறும் மற்றும் அவை போல்வனவுமாகிய நன்மைகள் ஒருவனுக்கு உளவாயின், இரங்குவானது (கடவுளது) பணியாகிய முயற்சி, அறமாய் முடியும். எனவே இவ்ஒழுக்கம் முதலியவற்றை மறுதலித்த தீமைகள் ஒருவனுக்கு உளவாயின், அம்முயற்சி பாவமாய் முடியும் என்பதூஉம் பெற்றாம் என்பது இப்பாட்டுக்கு முனிவர் அளிக்கும் உரை. மேலும்,

ஒழுக்கம் என்பது உலகத்தொடு ஒட்ட ஒழுகலைக் குறிக்கும். "உலகத்தொடு ஒட்ட ஒழுகல் கல்லார் பல கற்றும் அறிவில்லார்" எனும் திருவள்ளுவர் கருத்தையும் பரிமேலழகர் இக்குறளுக்கு உரைக்கும் விளக்கத்தையும் நாம் நோக்கலாம். துறவு என்றது எல்லா நிலையிலும் சேறற்குரிய பிற மகளிர் விழையாமை, வரைவில் மகளிர் விழையாமை முதலிய ஆண்தகைமையே என்று உணர்த்துவார். அழுக்கிலா என விசேடித்தார். அறிவாவது தக்கனவும், தகாதனவும் பகுத்தறிதல், வந்தித்தல், வணங்கல், அர்ச்சித்தல் மூத்தார் மாட்டுச் செய்வனவற்றைக் குறிக்கும் என்பது சிவஞான முனிவர் தரும் விளக்கம். இவ் ஒழுக்கம் முதலிய எல்லாம் இயமம், நியமம் என்னும் இருவகையுள் அடங்கி அறஞ்செய்வார்க்கெல்லாம் பொதுவகையான் வேண்டப்படும் அங்கமாகலின் இவற்றை வேறெடுத்து ஓதுகிறார். சிவஞான முனிவர் கருத்தின்படி ஒழுக்கம் முதலிய பதினாறும் அங்க அறம் (அதாவது அறத்தின் பகுதி எனப்படும்.

*"மனமது நினைய வாக்கு வழுத்த மந்திரங்கள் சொல்ல*
*இனமலர் கையில் கொண்டங்கு இச்சித்த தெய்வம் போற்றி*
*சினமுதல் அகற்றி வாழும் செயல் அறமானால் யார்க்கும்*
*முனமொரு தெய்வம் எங்கும் செயற்கு முன் நிலையாம் அன்றே"*

– சிவஞான சித்திசுபக்கம்114

அவ்ஒழுக்க முதலிய நன்மைகளை உடையனாய் அவற்றை மறுதலைத்த தீமைகளை நீக்கி ஒழுகுவான் ஒருவனுக்கு தன் கருத்திற்கியைந்ததொரு கடவுளை மனமொழி மெய்களான் வழிபட்டு

வாழும் செயலாகிய அறமும் உளதாயின், முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளாகிய சிவபெருமானே அத்தெய்வத்தினிடமாக நின்று அச்செயலை ஏற்றுக்கொண்டு பயன் உதவும். மேற்கூறிய ஒழுக்கம் முதலிய அங்கங்கட்கு ஈண்டு கூறிய அறம் அங்கியாகலின் உடன் எடுத்து ஓதினார். கடவுளை வணங்குதல் முதன்மையான அறம் (அங்கி அறம்) என்பது சிவஞானமுனிவர் கருத்து.

சிவஞான சித்தியார் சுபக்கப் பாடல்கள் 113, 114 ஆகியவை அருகருகே அமைந்த தன்மை இருகுறள்களுக்கு இடையே உள்ள உறவை திரு.க.வச்சிரவேல் முதலியார் அவர்கள் காண உதவுகிறது.

*"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்*
*பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"* 5

இறைவனின் பொருள்சேர்ந்த உண்மையான புகழைப் போற்றுபவர்களிடத்தில், அறியாமையால் வரும் நல்வினை, தீவினை என்னும் இரண்டு வினைகளும் சேரமாட்டா.

*"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க*
*நெறிநின்றார் நீடுவாழ் வார்"* 6

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளின் வழியாக ஏற்படும் ஆசைகளை ஒழித்த இறைவன் பொய்தீர் மெய்வழியில் நின்றவர்கள் உலகில் நெடுங்காலம் வாழ்வர்.

திருக்குறள்பா பொதுவாக ஒரு கேள்விக்குப் பதில் கூறுவதுபோல அமையும். இந்திய தத்துவத்தில் பொதுவாகக் கூறப்படும் வினை நீங்க வழியாது? என்னும் கேள்விக்கு விடையாகவே இறைவனின் பொருள் புகழ்புரிந்தார் மாட்டு இருள்சேர் இருவினையுஞ் சேரா என்னும் குறள் கருத்தை விடையாக அளிக்கிறார் திருவள்ளுவர். ஆகவே பன்னிரு திருமுறை, நாலாயிர திவ்ய பிரபந்தம் ஆகிய இறைவனின் பொருள்சேர் புகழ்புரியும் நூல்கள் நமக்கு இருவினையிலிருந்து விடுதலை அளிக்கும் என்று விளங்குகிறது. ஒருவர் ஆண்டு ஆரம்பமுதல் ஆண்டு முடியும் வரை திட்டமிட்டு முதல் திருமுறை தொடங்கி பன்னிரண்டாம் திருமுறைவரை முறையாக பல ஆண்டுகள் சைவ திருமுறைகளை ஓதிவருகிறார். ஆயினும் அவர் மனதில் இருவினைகள் முழுவதும் நீங்கியவாறு தோன்றாமல், வினை காரணமாகத் துன்பம் தொடர்ந்து

வருவது அவரது மனதை வருத்துகிறது. அப்போது அவர் திருவள்ளுவரிடம் மனம் உருகி துன்பமில்லா நிலை பெற வழியை வேண்டுகிறார். அந்நிலையில் அந்த அன்பருக்குப் பதில் சொல்லும் முறையில் அமைந்ததே ஒழுக்கநெறிநின்று திருமுறைகளை ஓதுவதால் வினைத் துன்பத்திலிருந்து விடுபட்டு இவ் உலகில் இன்பமுடன் நீடுவாழலாம் என்னும் "பொறிவாயில்" என்று தொடங்கும் பாடல் என்பது விளங்குகிறது.

திருக்குறளை பரிமேலழகர் போன்ற சான்றோர் உரையுடன் படிப்பது முதல்படி. அடுத்து அவர் சாரும் சமயநூல் (சைவருக்கு சிவஞான சித்தியார் போன்றது) நன்கு படித்து, பிறகு மீண்டும் திருக்குறள் படிக்க வேண்டியது இரண்டாவது படி. சமய நூல்களைப் படித்த பிறகு திருக்குறளைப் படிக்கும்போது திருக்குறளின் ஆழ்ந்த பொருள் விளங்கும். சமய நூலைப் படித்து திருக்குறளின் ஆழ்ந்த பொருளைக் கற்கும் நெறியில் நிற்க முயல்வது வாழ்வின் முடிநிலைப் பயனாகிய மூன்றாம் படியாகும்.

திருச்சிற்றம்பலம்!

---

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, அல்லது ஆண்டுச் சந்தாவாகவோ அல்லது புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

– ஆசிரியர்

# பூவும் நாரும் – 25

(சாமி. தியாகராசன்)

ஆண்டவனுடைய திருவடியையும், அடியவர்களின் உள்ளத்தையும் பூவாக உருவகம் செய்வது கவிமரபு. பூ எனப் பொதுவாகச் சொன்னாலும் அது தாமரை மலருக்கே சிறப்பாகச் சென்று சேரும். ஏனெனில் "பூ என்பது பொறிவாழ் பூவே – ஊர் என்பது உறையூரே" என்பது இலக்கண வழக்கு.

மலர்ச்சியும், குளிர்ச்சியும், மென்மையும், தன்மையும், நிறமும், மணமும் ஒருங்கே பெற்றிருத்தலால் தாமரை சிறப்புடையதாகிறது.

*"காட்டா தனவெல்லாம் காட்டிச் சிவங்காட்டித்*
*தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி"*

என்னும் திருவாசகத்தானும்;

*"நிமலன் நின்மலன் நீதி வானவன்*
*நீள்மதிள் அரங்கத் தம்மான், திருக்*
*கமல பாதம்வந் தென்கண்ணி னுள்ளன"*

என்னும் திவ்விய பிரபந்தத்தானும் இறைவன் திருவடி தாமரைப் பூவாக உருவகிக்கப்பட்டுள்ளதை அறியலாம்.

*"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்*
*நிலமிசை நீடுவாழ் வார்"*

என்ற குறளில் மலர்மிசை ஏகினான் என்னும் தொடருக்குப் பரிமேலழகர்

*"அன்பான் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண்*
*அவரவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின்"*

என விளக்கம் தருகிறார்.

அடியவரது உள்ளம் தாமரைப் பூவாக உருவகம் செய்யப்படுவதை இந்தக் குறள்வழி அறிய முடிகிறது.

ஆண்டவனின் திருவடி மலர்ந்த நிலையில் இருப்பதாகும்.

அடியவரது உள்ளமும் மலர்ந்த நிலையினதே. திருவடியும் உள்ளமும் கூம்பிய நிலையில் இருப்பதாக வருணிப்பது மரபாகாது. அவ்வாறு உருவகிக்கக்கூடாது. "மலர் சிலம்படி" என்னும் சேக்கிழார் வாக்கு அதனை உறுதி செய்யும்.

திருவடியும், உள்ளமும் மலர்ந்த நிலையில் இருப்பவேனும் ஒரு சமயம் அவை ஒன்றில் ஒன்று சேரும். அவ்வாறு சேருவதற்குரிய காலம் வாய்க்கப்பெறவேண்டும்.

தாமரை உள்ளிட்ட உலகத்து நால்வகைப் பூக்களைக் கட்டுவது நார். இதுவே பூக்களைக் கட்டுவதற்கான சாதனம். பதப்படுத்தப்பட்ட வாழை மட்டையிலிருந்து மெல்லிதாக நூல்போன்று கிழித்து எடுக்கப் பெறுவதையே நார் என்பர். இன்று வாழை நார் அதிகம் கிடைக்காத நிலையில பூக்களைக்கட்ட நூலைப் பயன்படுத்துகின்றனர்.

வாழைநாரால் இணைக்கப்படும் உலகத்துப் பூவை இங்கே பேசவில்லை. மாறாகக் கண்ணால் காணமுடியாத கருத்தால் மட்டுமே காணமுடிகின்ற இறைவன் திருவடி, அடியவர் உள்ளம் ஆகிய பூக்களையே இங்கே எடுத்துப் பேசுகிறோம்.

இந்தப் பூக்களை இணைப்பதற்குரிய சாதனமும் நாரேயாகும். இந்த நார் வாழைநாரன்று. அன்பு எனச் சொல்லப்படும் நார். நார் என்பதற்கு அன்பு என்ற பொருளும் உண்டு.

*"நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்*
*குலத்தின்கண் ஐயப் படும்"*

என்ற குறளில் காணப்படும் "நார்" என்னும் சொல் "அன்பு" என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. "நாரின்மை" என்பதற்கு "ஈரமின்மை" எனப் பொருள் சொல்கிறார் பரிமேலழகர். "ஈர அன்பினர்" என்பது சேக்கிழார் வாக்கு. "அவன் நெஞ்சில் ஈரம் என்பதே கிடையாது" என்னும் உலக வழக்கில் ஈரம் என்பது அன்பு என்னும் பொருளைச் சுட்டி நிற்பதை உணரலாம்.

அன்பாகிய நார் உடலில் தங்கியுள்ளதா? உயிரில் தங்கியுள்ளதா? உயிரில் தங்கியுள்ளது என்கிறார் வள்ளுவர். "அன்பின் வழியது உயிர்நிலை" என்பது வள்ளுவர் வாக்கு. இதனைத்தான் உயிர்நார் என்பர். உலகத்துப் பூக்களைக்கட்ட பயன்படுவது வாழை நார். உலக முதல்வனைக் கட்ட பயன்படுவது உயிர் நார்.

தமிழ்ச் சமய இலக்கியப் பரப்பில் உயிர் நாரால் கட்டப்பட்டுள்ள ஒரே நூல், ஒப்பற்ற நூல் பெரியபுராணம் மட்டுமே எனக்கூறின் அது மிகையாகாது. இந்தக் கட்டைப் பற்றி ஆங்கிலப் பேராசிரியரான அமரர் கே.ஆர்.ஸ்ரீநிவாச ஐயங்கார் அவர்கள் "எல்லையற்ற பேரன்பின்மேல் அளவுபடா அழுத்தம் சிவணிய ஓர் உலகமே பெரியபுராணம்" எனக் கூறியுள்ளார் என்பதைச் சேக்கிழார் அடிப்பொடி அறிஞர் தி.ந. இராமச்சந்திரன் அவர்கள் எடுத்துச் சொல்கிறார்.

அன்பனே ஓலம்! ஓலம்! எனச் சிவபெருமானை அலறவிட்டது இயற்பகையின் நார்க்கட்டு.

*"இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்*
*செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகன்"*

என மார்கழி நோன்பு கொள்ளும் பெண்கள் பேசும் பேச்சில், சிவபெருமானைச் சேவகனாகக் கொள்ள வைத்தது எது? அவர்கள் உள்ளத்து அன்பு. இதனையே நமது சேக்கிழார்

*"அடியவர் மனைகள் தோறும்*
*சென்றுஅவர் நிலைமை காட்டும் தேவர்கள் தேவர்"*

என்கிறார்.

தொண்டர் அன்பெனும் தூநெறி வெளிப்படுக்க வேண்டிப் பரமன் கொள்ளும் வேடம் பலப்பல. அவ்வாறு கொள்ளும் வேடத்தின் நோக்கம் யாது? என்ற கேள்விக்குத் "தொண்டர் அன்பெனும் தூயநீர் ஆடுதல்" நோக்கம் என்கிறார் சேக்கிழார். நில்லு கண்ணப்ப! நில்லு கண்ணப்ப! நில்லுகண்ணப்ப! எனப் பரமசிவனைப் பதைபதைத்து கூவவைத்தது திண்ணனது திண்ணிய அன்பே அல்லவா?

அடியார்களது உயிர்நார்க்கட்டை உணரவேண்டின் பெரியபுராணம் படிக்கவேண்டும். ஊன்றிப்படிக்க வேண்டும். உணர்ந்து படிக்க வேண்டும்.

முன்புசெய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான அன்பினைக் கண்ணப்பருக்கு எடுத்துக் காட்டியது என்கிறார் சேக்கிழார். பூர்வ ஜன்ம புண்ணியமே குடுமித் தேவரிடம் கொண்டு சேர்த்தது திண்ணனை. கண்ணப்பருக்குக் கூறியது அனைவருக்கும் பொருந்தும்.

அடியார்களின் வரிசையில் வாழையடி வாழையென வந்த நமது சாமியின் திருவடிப்போது எனது உள்ளத்தில் வந்து தங்கியது. அதற்கு நான் செய்த புண்ணியம் என்பதை விட என்பெற்றோர் செய்த புண்ணியம் எனக் கூறுவதே பொருத்தமாக இருக்கும். எங்கோ சென்ற என்னை மடைமாற்றித் தம்மடிமீது கொண்டமகான் என்றே சாமியைக் கொள்ளுகிறேன்.

"என் நெஞ்சம் திறப்போர் நிற்காண்குவரே" என்பது புறநானூறு. எவரேனும் என் நெஞ்சைத் திறந்து பார்த்தால் அங்கே சாமியின் திருவடித் தாமரையை என்று உள்ளத்தில் ஊற்றெடுக்கும் உயிர் நார் கட்டிக் கொண்டு கிடப்பதைக் காணமுடியும்.

எனது நெஞ்சத் தாமரையில் தமது திருவடியின் தடம் பதித்துக் கோயில் கொண்டுள்ள அந்தத் தாமரைக்கு வாட்டம் கிடையாது. வதங்குதலும் கிடையாது. என்றும் எப்போதும் அது மலரடியாகவே விளங்கும். அந்தப் பூவோடு சேர்ந்த எனது உயிர்நாருக்கும் வாட்டம் கிடையாது. வருத்தம் கிடையாது. அவை "பூவும் நாருமாக" ஒன்றில் ஒன்று ஒன்றி எனது உள்ளக் கிழியில் ஓவியமாகத் திகழ்கின்றன எனக் கூறி நிறைவு செய்கிறேன்.

(முற்றும்)

*நமது தலைமுறையில் நாம் கண்ட மாபெருந் தலைவர்களை அடுத்து வந்த தலைமுறையினர் தலைவர்கள் பெயரை மட்டுமே உச்சரிக்கின்றனர். தலைவர்களுடைய கொள்கைகளை விட்டுவிட்டனர். தலைவர்கள் பெயரைப் பயன்படுத்துவதற்குரிய காரணம் அத் தலைவர்கள் மக்களால் அங்கீகரிக்கப் பெற்றவர்கள். அத்தலைவர்களுக்கு மக்கள் வழங்கியுள்ள அங்கீகார நிழலிலேயே வாழ ஆசைப்படுகின்றனர்.*

**- அருள்நெறித்தந்தை**

# நமசிவாய வாழ்க

(அய்க்கண்)

2.7.2014....

அன்று, பழந்தமிழ் இலக்கிய வானில் ஒளிவீசிக் கொண்டிருந்த ஒரு நட்சத்திரம். சரேலென்று மறைந்துவிட்டது. தமிழ் இலக்கியங்களில் ஆழ்ந்த புலமையும் தீர்க்கமான அறிவும் "கேட்டார்ப் பிணிக்கும்" நாவன்மையும் மிக்கதாய் விளங்கும் ஒரு தலைமுறையின் முன்னணி அறிஞர் பா. நமசிவாயம் அவர்கள் அமரராகிவிட்டார்.

அந்தப் "பெரும்புலவ"ரோடு ஏறத்தாழ 30 ஆண்டுகள், தமிழ்த் துறையில் துணையாகவும், இலக்கியத் தொண்டிலே தோழனாகவும், பக்கத்துவீட்டு உறவினனாகவும் வாழ்ந்திருந்த எனக்கு,அவரைப் பற்றிய பல்வேறு "முகங்களைக்" காட்டும் கடமையை உணர்கிறேன்.

இந்த நாட்டிலே உயர்ந்த அறிஞர்கள், கலைஞர்கள், விஞ்ஞானிகள், தலைவர்கள், தொழிலதிபர்கள், சாதனையாளர்கள் நிறையப் பேர் வாழ்கிறார்கள். ஆனால் உயர்ந்த "மனிதர்கள்" என்று தேடிப்பார்த்தால், வெகு சிலரே காணப்படுகிறார்கள்.

"தோழமை என்று சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ" என்று பொருமிய குகவேடனாய், அந்த "நடையில் உயர் நாயகனைப்" போற்றிப் புகழ என்நெஞ்சம் துடிக்கிறது.

பா.நமசிவாயம் அவர்களுக்கு, மதுரைப் பல்கலைக் கழகம் முதல் எத்தனையோ நிறுவனங்கள், பட்டங்களையும் விருதுகளையும் வழங்கிச் சிறப்பித்திருந்தாலும், பாரியின் பறம்புமலையில் அருள்நெறித் தந்தை குன்றக்குடி அடிகளார் வழங்கிய "பெரும் புலவர்" என்ற பட்டத்தையே விரும்பி, தன் பெயருக்கு முன் போட்டுக் கொள்வார்.

பட்டிமன்றங்களுக்கு முன்னோடியாய்த் திகழ்ந்த அடிகளார் அவர்கள் கலந்துகொள்ளும் நிகழ்ச்சிகளில் ஆஸ்தானப் பேச்சாளர், பெரும்புலவர்தான்: அவர்களிடம் தான், இன்றையப் பிரபல பட்டிமன்ற நடுவர்கள் பயிற்சி பெற்றார்கள்.

என்னைப் போன்ற "அரைகுறைகள்" அவரோடு பட்டிமன்றம் பேசவேண்டிய அவசியம் சில சமயங்களில் ஏற்பட்டுவிடுவதுண்டு. அப்போது எங்கள் கட்சியில் "என்னென்ன சொல்ல வேண்டும்; பேசவேண்டிய "பாயிண்ட்ஸ்" "என்னென்ன? என்று பெரும்புலவரிடம் கேட்டு நச்சரிப்போம். தொட்டனைத்து ஊறும் மணற்கேணி" போல, எங்களுக்குக் கருத்துகளை அள்ளியள்ளிக் கொடுப்பார். அப்படியே அவற்றை நாங்கள் பேச்சில் கொட்டிவிட்டு, "இனிமே இவர் சொல்வதற்கு என்ன இருக்கிறது? இவர் என்ன பேசப் போகிறார்" என்று நினைத்துக் கொண்டிருப்போம். ஆனால், அவர், நாங்கள் பேசியதையெல்லாம் தாண்டி, மேலும் சிறப்பாகக் கூறும் கருத்துகள், அவையோரை மகிழச் செய்வதுபோல், எங்களை வியக்கச் செய்துவிடும்.

இன்றைய பிரபல பேச்சாளர்களைப் போல், அவர் "சன்மானத் தொகை"யை நிர்ணயித்துப் "பேரம்"பேசுபவர் அல்ல. விழா அமைப்பாளர்கள் கொடுப்பதை அப்படியே பிரித்துக்கூடப் பார்க்காமல், பைக்குள் வைத்துக் கொள்வார். அவரோடு பேசுகிறவர்களுக்கு, காப்பி, சிற்றுண்டி, சாப்பாடு எல்லாம், அவர் செலவுதான். "நான்தான் வயதில் மூத்தவன்; இளையவர்கள் கொடுக்கக்கூடாது" என்று சொல்லிவிடுவார்.

பல பேச்சாளர்கள், "ரேடிமேட்" ஜோக்ஸ், நகைச்சுவைக் கதைகளை, வெவ்வேறு ஊர்களிலும் சொல்லிச் சிரிக்க வைப்பார்கள். ஒரே கருத்தை, ஒரே ஊரிலேயே பலமுறை சொல்பவர்களும் உண்டு. ஆனால், ஒரு மேடையில் பேசியதை இன்னொரு மேடையில் பேசாத அபூர்வப் பேச்சாளர்கள், தமிழகத்தில் - எனக்குத் தெரிந்த வரையில் - இருவர்தான். ஒருவர், பேரறிஞர் அண்ணா : இன்னொருவர் பெரும்புலவர் நமசிவாயம்.

இந்த விஷயத்தையே பெரும்புலவர் மதுரை சோமுவிடம், "மருதமலை மாமணியே முருகையா" என்ற பாடலைப் பாடுங்க? என்று ஒவ்வொரு ஊரிலும் மக்கள் விரும்பித் திரும்பத் திரும்பக் கேட்டு மகிழ்கிறார்கள். ஆனால் பேச்சாளர், ஒரு ஊரிலே சொன்ன ஜோக்கை இன்னொரு ஊரில் சொன்னால், இதைத்தான் அன்னிக்கே சொல்லீட்டிங்களேனு முகத்தைச் சுளிக்கிறார்கள்; என்ன நியாயம் இது?" என்று சிரிப்பார் அவர்.

இயல்பான - இடத்திற்கேற்ற - நகைச்சுவை, அவருடைய இரத்தத்தில் ஊறியிருந்தது. வெளியூர்களில் பேச்சாளர்களுடன், பெட்டிக் கடையில் வாங்கிச் சாப்பிடும் வாழைப்பழங்கள் மிகவும் கனிந்து கசிந்து இருந்தால், "கடைக்காரர் மீது குற்றமில்லை ; நாம் தான் ஒருநாள் தாமதமாக வந்து சாப்பிடுகிறோம்" என்பார். நன்றாகப் பழுக்காத அரைப் பழமாக இருந்தால் "நாம் ஒரு நாள் முன்பாகவே வந்துவிட்டோம்" என்று சொல்வார்.

இறுதிக் காலத்தில், மருத்துவமனையில் நர்ஸ் "ஐயா! வலிக்காமல் ஊசி போடுகிறேன்" என்று சொல்லிவிட்டு ஊசிபோடும்போது "ஆ!..." என்று வலி தாங்காமல் அலறினார் பெரும்புலவர். "ஏன் ஐயா, இப்படி அலறுகிறீர்கள்?" என்றாள் அவள். "வலிக்காது என்று சொல்லி, ஊசி குத்துவது நர்ஸின் கடமை ; வலிக்கிறது என்று கத்துவது, நோயாளியின் கடமை" என்று சிரித்தார் அவர்.

அந்த மருத்துவமனையில் ஒரு நர்ஸ் "ஐயா! எனக்குத் திருமணம் ஆகப்போகிறது. இன்று காலை, வேலையிலிருந்து ராஜினாமா பண்ணிவிட்டேன். போய்வருகிறேன்" என்று விடைபெற்றபோது, "திருமணத்திற்கு முன்கூட்டியே எனது வாழ்த்துக்கள்... தீர்க்க சுமங்கலியாய் வாழ்க..." என்று கூறி அன்பளிப்பாக, ஓர் ஆயிர ரூபாய்த் தாளை நீட்டினார் பெரும்புலவர்.

திகைத்துப்போன நர்ஸ் "இல்லை, ஐயா! இங்கே அன்பளிப்பு வாங்கக்கூடாது; கண்டிப்பான விதிமுறை" என்று மறுத்தாள்.

"நீதான், காலையிலேயே வேலையை ராஜினாமா பண்ணிட்டியே, நீ இப்போ இங்கே நர்ஸ் இல்லை ; நாளைய மணமகள்" என்று கூறி அவளுக்கு அன்பளிப்பு வழங்கினார் அவர்.

பெரும்புலவர் செய்த பெரும்புண்ணியம், அவருக்கு வாய்த்த குடும்பம்தான். இல்லத்தரசி ஜானகியம்மாள், "திருக்குற்றாலக் குறவஞ்சி" பாடிய திரிகூடராசப்பக் கவிராயரின் பேத்தி; ஒரு மகன், பாலசுப்பிரமணியன், ஒரு மகள் திலகவதி. "ஒரு" என்பது எண்ணிக்கை மட்டுமல்ல ; தமிழ்; "ஒரு" என்றால் "ஒப்பற்ற" என்ற அர்த்தமும் உண்டு - ஒப்பற்ற பிள்ளைகள் இருவரும்.

இவர்களுக்கு மட்டுமல்ல – ஆசிரியர் குடியிருப்பிலிருந்த எல்லாக் குழந்தைகளுக்கும் தாய் ஜானகியம்மாள். அவரும் பெரும்புலவரும், என் குழந்தைகள் இருவருக்கும் "அம்மா" "அப்பா" என்றால், என் பேரக்குழந்தைகளுக்கும் அவர்கள்தான் "ஆயா" "அய்யா". என் வீட்டுக் கதவைத் திறந்தால் உடனே வெளியே பாய்ந்து "ஜானகி ஆயா வீட்டுக்குப் போறேன்" என்று பறந்துவிடுவான் என் பேரன் வசந்த்.

அவர் வீட்டுக் கொய்யா மரத்தில் ஏறிக் கொண்டிருந்தான் என் பேரன். அவனைப் பார்த்ததும் "ஏன்டா, கிஷ்கிந்தாவாசியாயிட்டியா?" என்று சிரித்தார் பெரும்புலவர் அய்யா.

"கிஷ்கிந்தாவாசின்னா, "வாலியா, சுக்ரீவனா, அனுமனா, அங்கதனா?" என்று திருப்பிக் கேட்டான், கம்பன் வீட்டுக் கட்டுத்தறி.

"டேய்! நீயெல்லாம் பேச ஆரம்பிச்சிட்டா, நாங்க பேச்சை நிறுத்திட்டு வீட்டிலே இருந்திட வேண்டியதுதான்டா!" என்று செல்லமாகப் பாராட்டினார் அய்யா.

தமிழ்த்துறையில் உதவிப் பேராசிரியராக இருந்தபோதே, என்னுடைய சிறுகதைத் தொகுப்பு ஒன்று, பல்கலைக் கழகங்களிலே பாடப்புத்தகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தது. துறைத் தலைவரும் நூல் எழுதவேண்டும் என்று அவரைத் தூண்டி, ஒரு கட்டுரைத் தொகுப்பு வெளியிடச் செய்தேன். என் மூத்த நூலுக்குத் தலைப்பு இட்டார் பெரும்புலவர்.

பேச்சின் மேல் உள்ள ஈடுபாடு, அவருக்கு எழுத்தில் இல்லை என்றே சொல்லலாம். ஆனால் எழுதத் தொடங்கிவிட்டால், ஒரே மூச்சில், குண்டு குண்டான எழுத்தில், அடித்தல் திருத்தலே இல்லாமல் எழுதிமுடித்துவிடுவார்! நம்மைப் போல், மூலப் பிரதி, அடுத்த பிரதி, திருத்தப் பிரதி என்று அடித்துத் திருத்தி, அடித்துத் திருத்தி எழுதுகிற கதையெல்லாம் அவரிடம் இல்லை.

அழகப்பா கல்லூரியில் இவருடைய மாணவராக இருந்து, இவருடைய பேச்சில் மயங்கிய நா.ஆறு. நாகராஜன் (பிற்காலத்தில் "நகரத்

தந்தை"யாக விளங்கியவர்) திருப்புத்தூரில் ஆறுமுகம் பிள்ளை சீதை அம்மாள் கல்லூரியைத் தொடங்கியதும், தன் ஆசிரியரைத் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியில் அமர்த்தினார்.

அருள்மாமணி வள்ளல் ஆறுமுகம்பிள்ளை அவர்கள், மலேசியாவில் நடந்த திருமுறை மாநாட்டில் பேசுவதற்காக, பெரும்புலவர் அவர்களை, பினாங் நகருக்கு விமானத்தில் வரவழைத்தார். பூவோடு சேர்ந்த நாராக, நாங்கள் இரண்டு பேராசிரியர்களும் உடன் சென்றோம்.

1950-களில் தமிழ்ப் பேச்சாளர்கள், வெளிநாடுகளுக்கு விமானத்தில் செல்வது என்பது வெகு அபூர்வம். நாங்கள் மலேசியா, சிங்கப்பூர் சென்று திரும்பியதும், இன்று பிரபலமாக விளங்கும் பட்டிமன்றப் பேச்சாளர் கூறியது, இன்னும் என் நினைவில் இருக்கிறது.

"நாங்களெல்லாம் ஒரு விமானத்தை வெளியில் நின்று தொட்டுப் பார்க்கக்கூட முடியாத காலத்தில், நீங்கள் விமானத்திற்கு உள்ளேயே ஏறி உட்கார்ந்து பறந்துபோய், திரும்பிவந்துவிட்டீர்களே!" என்று அதிசயித்தார் அவர்.

நோய்வாய்ப்பட்ட பிறகும், டயலிஸ் செய்துகொள்ளும் இடைவெளி நேரத்தில், பக்கத்து ஊர்களுக்குச் சென்று, இலக்கிய விருந்து படைத்து மக்களை மகிழ்விக்க அவர் ஒப்புக்கொண்ட பெருங்குணம், எங்களையெல்லாம் உருகச் செய்யும். காரைக்குடி இலக்கிய விழாவுக்குத் தலைமை தாங்க வந்து, நீண்ட நேரம் உட்கார்ந்திருந்ததால், அவரது திருவடிகள் செருப்பே அணியமுடியாத அளவுக்கு வீங்கிப் போன காட்சி, எங்கள் கண்களை நனையச் செய்தது. சொற்பொழிவுப் பணிக்காக, எந்தத் துன்பத்தையும் தாங்கிக் கொள்ளும் நெஞ்சுரம் அவரிடம் நிறைந்திருந்தது.

நிறைவாக - என் உள்ளத்தில் பொங்கும் ஆதங்கம், வழக்கமானதுதான்.

தமிழகத்தின் தலைநகரம், தொலைதூரத்துத் தென்கோடி மாவட்டங்களில் வாழும் அறிஞர்களைக் கண்டுகொள்வதில்லை...

பெரும்புலவர் அவர்கள், இளமையிலே சென்னைக்குக் குடிபெயர்ந்திருந்தால், அவர் எட்டியிருக்கக்கூடிய சிகரத்தை இப்போது நினைத்துப் பார்க்கிறேன்.

ஆனால், திருநாவுக்கரசர் தேவாரம்பாடிய திருப்புத்தூர்த் தலத்தை விட்டு அவர் சென்னை செல்ல விரும்பவில்லை. கடைசிக் காலத்தில், தலைநகர் அவரது பெருமையை உணர்ந்து தலையில் தூக்கி வைத்து ஆடத் தயாராக இருந்த நிலையில், அவரது தலையெழுத்து வழிமறித்து விட்டது.

இறுதிவரை, அவர் "திருப்புத்தூர்ப் பெரும்புலவரா"கவே வாழ்ந்து மறைந்ததும், எங்கள் மண்ணுக்குப் பெருமைதான்.

---

## பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் மறைவு

மயிலம் பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் 10.11.2014 அன்று காலமானார். இத் தமிழ்ப் பேரறிஞர் தொல்காப்பியம் உரைவளம் முதலிய பல தமிழ் ஆய்வு நூல்களைத் தமிழுக்குத் தந்து ஆக்கம் சேர்த்தவர். குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன அமைப்பான திருப்புத்தூர்த் தமிழ்ச்சங்கத்தின் முதன்மை உறுப்பினராகத் திகழ்ந்தவர். இப்பெருமகனாரின் மறைவு தமிழுலகத்திற்கு ஈடு செய்யமுடியாத பேரிழப்பாகும். இவரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் இவர்தம் குடும்பத்தினருக்கு "மக்கள் சிந்தனை" ஆழ்ந்த இரங்கலையும் ஆறுதலையும் தெரிவித்துக் கொள்கிறது. மறைந்த பேரா.ஆ. சிவலிங்கனாரின் நல்லுயிர் இறைவன் திருவடி நீழலில் இன்ப அமைதி பெறப் பிரார்த்திக்கிறது.

– ஆசிரியர்.

# உலகத் திருக்குறள் பேரவை
# தூத்துக்குடி மாவட்டக் கிளை
### அங்கமங்கலம், குரும்பூர் - 628 207

தூத்துக்குடி மாவட்டக்கிளையின் சார்பில், திருக்குறளில் "கடவுள் வாழ்த்து" எனும் தலைப்பில் கருத்தரங்கம் C.M. மேனிலைப்பள்ளியில், பாபநாசம் திருவள்ளுவர் கல்லூரியின் முன்னாள் முதல்வர் பேராசிரியர்.ச.சவகர்லால் தலைமையிலும், பேரவையின் தலைவர் ஆ. திருச்சிற்றம்பலம் முன்னிலையிலும் நடைபெற்றது.

உலகத் திருக்குறள் பேரவையின் மாவட்டச் செயலாளர் "திருக்குறள்" மோ.அன்பழகன் வரவேற்றுப் பேசினார்.

திருக்குறளில் "கடவுள் வாழ்த்து" எனும் தலைப்பில் காமராஜ் கல்லூரி முன்னாள் பேராசிரியர் சு. கந்தசாமி, ஆசிரியர். அருமைநாயகம், விளாத்திகுளம் பள்ளி ஆசிரியர் தேவிகா பொன்னம்பலம் ஆகியோர் உரையாற்றினார்கள்.

கூட்டத்தில் கோ. பாலசுப்பிரமணியன், புதிய தலைமுறை அறக்கட்டளை மண்டல மேலாளர் கணேசன், விவேகானந்தர் அரிமா பொருளாளர் அமிர்தநாயகம், விவின், பாலகிருட்டிணன் மற்றும் பேரவை உறுப்பினர்கள கலந்து கொண்டனர்.

கூட்டத்தின் நிறைவாக மு. முருகேசன்நன்றி கூறினார்.

அன்புடன்

**மோ. அன்பழகன்**

*சகிப்புத்தன்மை, அனைத்துக் கருத்துக்களையும் ஏற்றுக் கொள்ளுதல் என்ற கருத்துக்களை உலகிற்கு கூறிய மதம் எங்கள் மதம். இதில் நான் பெருமைப்படுகிறேன். உலகளாவிய சகிப்புத் தன்மை மட்டுமல்ல. எல்லா மதங்களையும் உண்மை என்றே நாங்கள் ஏற்றுக்கொள்கிறோம். உலகிலுள்ள எல்லா மதங்களிலிருந்தும், எல்லா நாடுகளிலிருந்தும் துன்புறுத்தப்பட்டுத் துரத்தப்பட்டவர்கட்கும், அகதிகளுக்கும் அடைக்கலம் தந்து ஆதரித்த நாட்டைச் சேர்ந்தவன் நான். இதில் நான் பெருமையுறுகிறேன்.*

**- சுவாமி விவேகானந்தர்**

# சிறப்பாசிரியருக்கு வந்த கடிதம்

பெருமதிப்பிற்குரிய அடிகளார் அவர்கள் பொற்பாதங்கள் பணிந்து வணங்குகிறேன்.

தங்களது கருத்துக் கருவூலம் தாங்கிய தமிழ்ப் பண்பாடு புத்தகம் வாசிக்கின்ற மிகப்பெரிய பேறு பெற்றேன். 50 அத்தியாயங்களும் அரியதொரு பொக்கிசமாகும். ஒவ்வொரு உள்ளமும் மாசற்ற உள்ளமாக மலர்வதற்கு இந்தப் புத்தகம் மிகவும் உறுதுணை புரியும். மழலையர் காப்பகங்களில் வளர்வதும் முதியோர் காப்பகங்களில் பராமரிக்கப்படுவதும் மாறியாக வேண்டும். ஆலயங்களில் அன்னைத் தமிழ் பரவலாக்கப்படவேண்டும். இறைவன் எளியோர்க்கு இறங்கி வந்தது போல் நமது சமயமும் பேதமின்றி மக்களோடு இணைந்து சமதர்ம சமூகத்துக்கு வழிகாட்ட வேண்டும்.

மனித நேயத்தால் மலர்ந்த தமிழர் தம் வாழ்வு நெறிகள் பொருளியல் சார்ந்த நுகர்வுக் கலாச்சாரத்தில் தொலைந்து போகக்கூடாது என்பதைப் பல இடங்களில் அழுத்தமாக வலியுறுத்தி இருக்கிறார்கள். தமிழ்ப் பண்பாட்டுக் கோபுரம் என்றும் சரிந்துவிடாமலிருக்க, தங்களைப் போன்ற மகான்கள்தான் வழிகாட்ட முடியும். காலத்தின் அருட்கொடையாக தாங்கள் தந்துள்ள கருத்துப் பெட்டகங்களை போற்றிப் பாதுகாப்பதுடன் இயன்றவரை நட்பு மற்றும் உறவு வட்டத்தில் கொண்டு சேர்ப்பது தங்கள் திருவருளால் கைகூடும் என நம்புகிறேன்.

என்றும் அன்புடன்

– ஆ. சிவசூரியன், தூத்துக்குடி

*தோல்வி என்பது ஒரு நிகழ்ச்சி அல்ல. ஒரு விஷயத்தில் நாம் எதிர்பார்த்ததற்கு மாறான விளைவு. அதை வாழ்க்கையில் நமக்கு அவ்வப்பொழுது கிடைக்கின்ற பாடமாகக் கருதவேண்டும். இந்தப் பாடத்தைச் சரியாகக் கற்றுக் கொண்டுவிட்டால் அடுத்த முறை முயற்சி செய்கையில் வெற்றிக்கனி கிடைத்துவிடும். எனவே, தோல்வி என்பது ஒரு சொல் மட்டுமே! அதை ஓர் உபயோகமான அனுபவம் என்றும் வைத்துக் கொள்ளலாம்.*

– குருதத்

# உதிர்ந்தது, தொல்காப்பியப் பழம்!

(தமிழாகரர். தெ. முருகசாமி)

உதிர்ந்தது தொல்காப்பிய உன்னதத்தீம் பழமென்றே
அதிர்ந்தது நெஞ்சமெனக் குவலயம் போற்றுறும்
குன்றக் குடிவாழும் ஆதீனக் கவிஞராம்
மன்றுபுகழ் பரமகுரு மங்கலமாய்க் கூறியசொல்
குன்றக் குடியின் குரலாய் ஒலித்ததென
இன்றில்லை என்றுமே இந்தநல் ஞாலத்தில்
என்னதான் யார்தான் என்னென்ன சொன்னாலும்
அன்னதற்கு மேலாய் அமைந்ததென எண்ணுகையில்
"விட்டிடின்என் வேந்தன் விலையிடின்என்? இத்தலை
கிட்டிய தெல்லாமும் கிட்டிய தென்றிட்ட"
புறப்பொருள் வெண்பாவாம் மாலைநூல் கூறும்
திறப்பாடு மிக்கத் திகழ்செம் மொழியாலே
தொல்காப் பியவிருது கிட்டவிலை யானாலும்
தொல்காப் பியத்தின் உரைவளச் செம்மலெனும்
விருதே விருதென்னும் வித்தகந் தன்னைப்
பெருமையாய் எண்ணுகிற அன்னாரின் மாணாக்கர்
ஆயிர ஆயிரமாய் வாழ்கின்ற அனைவர்க்கும்
பாயிரமாய் வாழ்ந்திட்ட பைந்தமிழின் இலக்கணமா
மலைசாய்ந்து விட்டதென மாண்பாய் உணர்கின்றார்!
நிலையான தலையெழுத்தால் நீள்புகழ் ஆ.சிவலிங்கர்
நினைக்குந் தொறுமளிப்பார் நித்தம் தமது
நினைவாக ஆசி நமக்கு!

---

*கோழைத்தனம் என்பது அனைத்தையும் பாழாக்கும். வீரமே அனைத்தையும் வெல்லும். கோழைகள்தான் வன்முறையில் ஈடுபடுவார்கள். வீரர்கள், எப்போதும் சமாதானத்தைத்தான் நாடுவார்கள்.*

– நேரு

---

# புகழ் பொருந்திய வாழ்க்கை

வாழ்க்கையில் சிறப்புற்று விளங்க அடக்கம் தேவை. அடக்கத்துடன் வாழ்தல் ஒரு நுண்ணிய கலை, முற்றிய கதிர்மணிகள் தலை சாய்ந்து கிடக்கும். தாழ்வெனும் தன்மை பூண்டொழுகல் சைவத்தின் பண்பு. எந்தச் சூழ்நிலையிலும் அடக்கம் தவறுதல் கூடாது. சான்றோர்க்கு வணங்கி வாழ்தலைத் தவிர்க்கலாகாது. நற்றமிழ் நாவலூரர் திருவாரூரில், எந்தை ஈசனை வணங்கும் விரைவுணர்ச்சியில், தேவாசிரிய மண்டபத்தில் தங்கியிருந்த சிவனடியார்களை வணங்காமல் சென்று விடுகிறார். வணங்கக்கூடாது என்பது சுந்தரரின் எண்ணமன்று. பரபரப்பான விரைவு உணர்ச்சி! ஆனால், திருவாரூர்த் தியாகேசன் ஆரூரர்க்கு இதனை நயம்பட எடுத்து உணர்த்துகின்றார். அதன்பின் ஒரு தடவை வணங்க மறந்த ஆரூரர், பலத்டவை "அடியேன், அடியேன்" என்று பன்னிப்பன்னிக்கூறி வணங்குகின்றார். வெற்றி பொருந்திய வாழ்க்கை அடக்கத்தில் பிறக்கிறது. புகழ் பொருந்திய வாழ்க்கை அடக்கத்தினாலேயே கிடைக்கும் அடக்கத்தோடு தொடர்பில்லாத புகழ், வெற்றி ஆகியன வெறும் ஆகாசவாணமேயாம். நிலைத்த பயன் தாரா.

*"அருளு பெருஞ் சூலையினால்*
*ஆட்கொள்ள அடைந்துய்ந்த*
*தெருளும் உணர்வில்லாத*
*சிறுமையேன் யான்"*

என்று அப்பரடிகள் கூறிக்கொண்டதே அவரை ஆளுடைய அரசு ஆக்கிற்று.

**- அருள்நெறித்தந்தை**

**(ஆலயங்கள் சமுதாய மையங்கள் பக்கம் 66-67)**



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

குன்றக்குடி - 630 206

Phone: 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இயக்குநர்

மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி, 2. அழகுக்கலை, 3.லெதர் & ரெக்ஸின் பொருட்கள் தயாரித்தல், 4. பற்றவைப்பு (ஆர்க் & கேஸ் வெல்டிங்), 5.செல்போன் பழுது நீக்குதல், 6. T.V, Radio- பழுது நீக்குதல், 7. எம்ப்ராய்டரி 8. பனை ஓலைப் பொருட்கள் தயாரித்தல், 9.வீட்டு வயரிங் வேலை செய்தல், 10. இரண்டு சக்கர வாகனம்பழுது நீக்குதல், 11. ஆபரண நகை தயாரித்தல், 12. திரை அச்சு வேலை, 13. சேலை டிசைனிங், 14. கைவினைப் பொருட்கள் தயாரித்தல், 15.பொம்மைகள் தயாரித்தல், 16. காகித உறை மற்றும் பைகள் தயாரித்தல், 17. வீட்டு உபயோகப்பொருட்கள் பழுது நீக்குதல், 18. உணவுப் பொருட்கள் தயாரித்தல், 19. பேப்ரிக் பெயிண்டிங், 20. சாக்பீஸ், மெழுகுவர்த்தி, பினாயில், சாம்பிராணி தயாரித்தல் 21. கயிறு திரித்தல், 22. GFRB பொருட்கள் தயாரிப்பு, 23. சேலை புதுப்பித்தல் சுருக்கம் நீக்குதல், 24. எலக்ட்ரானிக் சோக் தயாரித்தல், 25. கூடை முடைதல், 26.உல்லன் நிட்டிங் 27. நாப்கின் தயாரித்தல், 28. தையல் இயந்திரம் பழுது நீக்குதல், 29. போட்டோ லேமினேசன், 30. ஐஸ்கிரீம் தயாரித்தல் 31. காளான் வளர்ப்பு, மண்புழு உரம் தயாரித்தல்,

| | | |
|---|---|---|
| தகுதி | : | தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும். |
| பயிற்சி நேரம் | : | பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம். |
| குறிப்பு | : | ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும். |

**BOOK POST**

**Book pocket containing printed matter**

**Price Rs. 8-00**

**MAKKAL CHINTHANAI-Oct - Dec' 2014**  Date of Publication 20-12-2014



பெறுநர்

திரு முகவர் [illegible],
95, அண்ணாமலை நகர்,
கோவிலூர் - 630307
காரைக்குடி.
அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166